# ஒரே படம்!



இன்பமூட்டவும் அறிவை வளர்த்திடவும் துணைசெய்கின்ற "ஒரே படம்"

வெற்றிமேல் வெற்றி பெற்றுத் திரளான மக்கள் தினமும் கண்டு களிக்கின்ற.............."ஒரே படம்"

பெருவாரியான மக்களின் உள்ளத்தைக் கவர்ந்துவிட்ட....."ஒரே படம்"

மக்களிடை மகத்தான மதிப்பைப் பெற்று மட்டற்ற மகிழ்ச்சியை அளித்திட்ட......................................"ஒரே படம்"

...அந்தப்படம் "வேலைக்காரி" தான் என்று திரண்டெழுந்து வரும் மக்கள் தீர்ப்புக்கூறுகின்றனர்

# வேலைக்காரி

ஒரு ஜூபிடர் வெற்றி.............. எஸ்.ஏ.சாமி உருவாக்கியது

அறிஞர் அண்ணாதுரை தீட்டியது

சென்னை பாரகன் · கிரௌன் · லக்ஷ்மி

மற்றும் · ராஜதானி · பூராவும் · நடைபெறுகிறது.



30 - 4 - 49 முதல் மதுரை சென்ட்ரலில் நடைபெறுகிறது

— 8-5

# சருமத்தடிப்பு சொஸ்தமாகிறது



"சருமத்தடிப்பு, எக்ஸிமா, முதலிய நோய்களுக்கு நான் சிகிச்சை செய்திருக்கிறேன். ஒவ்வொன்றும் வெல்டர்மாவுக்குப் பணிந்தன."

—N. E (நர்ஸ்)

## வழுவழுப்பானது, பிசுக்கற்றது

முதல் தடவையாக சருமத்தின் மேல் வல்டெர்மாவைத் தடவிய வுடனேயே அதிலிருக்கும் இருவித சக்திகளும் — வேலை செய்வதை நீங்களே **உணர்வீர்கள்.** இந்த இரு வித சக்திகளில் ஒவ்வொன்றும் பலவித கொடிய கிருமிகளுக்குச் சத்துரு — அநேகவித சரும வியாதிகளுக்கும் மூலகாரணமாகும் கிருமிகளையும் அடியோடு அழித்து விடுகிறது.

எரிச்சல், வேக்காடு அடங்குகிறது. சருமம் மறுபடியும் சுத்தமாகவும், சுகமாகவும், ஆரோக்ய மடைகிறது. எக்ஸிமா, கொப்புளங்கள், வேக்காடுகள், பருக்கள் மற்றும் சருமத்திற்கு அடியில் ஏற்படும் இதர ரோகங்களெல்லாம் சொஸ்தமாகின்றன.

வேறென்ன இருக்கிறது. நீரில் — எண்ணைச் சேர்க்கை என்னும் புதுமையை அடிப்படையாகக் கொண்டு தயார் செய்யப்பட்ட வெல்டர்மா— நோய்கண்ட சருமத்திலுள்ள விஷத்தை வெளியேற்றுவதோடு மீண்டும் நோய் தொத்திவிடாமல் தடுக்கிறது. சரும வைத்திய நிபுணர்களால் பரிசிலனை செய்யப்பட்டது. வல்டெர்மா, கறை உண்டாக்காது. பூசின இடத்தில் புலனாகாது. எந்த நேரத்திலும் எந்த இடத்திலும் உபயோகப் படுத்தலாம்.

ஜீயப்பே மானர்ஸ் & கோ., லிமிடெட்
பம்பாய் — கல்கத்தா — டில்லி — மதராஸ்




DOUBLE-ANTISEPTIC
**Valderma**
THE *Non-Greasy* BALM

V. 3

*விரைவில்*

**வெளிவருகிறது**









# நாட்டியராணி

B.S. சரோஜா......
ஜெயம்மா..........
வசுந்தரா.........
தவமணி..........
ராஜாமணி........
B.S. ராஜா அய்யங்கார்
T.S. பாலையா, சார்லி...
லலிதா, பத்மினி நடனம்

டைரக்ஷன்

**B.N. ராவ்**









சங்கீதம்
**D.K. பட்டம்மாள்** ★

ஸ்டுடியோ
**ஜெமினி**

**பாஸ்கர் பிக்சர்ஸ்**
101, சந்தோம் ஹை ரோட். மைலாபூர். மதராஸ்

ஆந்திரா லிட்
**கோதலகிருஷ்ண பிக்சர்ஸ்**
விஜயவாடா

மாகாணம் முழுவதும்

50 தியேட்டர்களில்

இப்பொழுது நடைபெறுகிறது...

சென்னை...ஸ்ரீபாரத்..ஸன்..ஸரஸ்வதி



பக்ஷிராஜாவின்

# பவளக்கொடி

டைரக்ஷன்...ஸ்ரீராமுலு நாயுடு

**NARAYANAN Co**

*Release*

# நகரில் தண்ணீர் பஞ்சம்

ஏன்
கவலைப்படுகிறீர்கள்?

ஒரு
டெமிங் "மார்வெல்"
வாட்டர் ஸிஸ்டம்
அமைத்துவிடுங்கள்.




இந்த பம்பு செட்டுகளை தற்போது உங்கள் வீட்டிலுள்ள கிணற்றிலும் அல்லது குழாயக் கிணற்றிலும் சுலபமாய் அமைக்கலாம். நீளமான குழாய் மாட்டுவது, உயரத்தில் டாங்கிகள் கட்டுவது முதலியவை தேவையில்லை. அவை முழுவதும் தானாகவே (ஆட்டோமாட்டிக்) வேலை செய்வதுடன் வருஷக் கணக்கில் திருப்திகரமாக சேவை புரியும்.



## குழாயைத் திறந்தால் தண்ணீர் கிடைக்கும்

## டெமிங் "மார்வெல்" வாட்டர் ஸிஸ்டம்

விசாரிக்குமிடம்:
சலவன் எஞ்சினியரிங் கம்பெனி லிமிடெட்,
பிராட்வே, மதராஸ்-1.



# எழுந்திருங்கள்!




பேவ்ர் - லூபா
உதவியால்




★ All JAZ Timepieces carry the bird trade mark and are imported only by Favre-Leuba & Co., Ltd. and sold at their showrooms or by their registered dealers.

உங்கள் ஜாஸ் அலாரம் உங்களை நிச்சயம் எழுப்பிவிடும் என்ற நம்பிக்கையுடன் நிம்மதியாகத் தூங்குங்கள். இப் பிரபல கடிகாரத்தின் இனிமையான ஆனால் நீடித்தெழும் ஸ்வரங்களின் இசைக்கு எழுந்துக் கொள்ளுங்கள்.

நெ. 8445. பிளெயின் டயல் ரூ. 24/8
நெ. 8445. ரேடியம் டயல் ரூ. 26/-




பேவ்ர்-லூபா & கோ., லிட்., பம்பாய் & கல்கத்தா

... வருகிறது ...



ஸ்ரீ ராஜராஜேஸ்வரி பிக்சர்ஸ் தயாரித்த

# நவ ஜீவனம்

நித்திய வாழ்க்கையில் நிகழும் விந்தைகளை நினைவுறுத்தும் சித்திரம்

**நாகய்யா • கண்ணாம்பா • ஸ்ரீராமன் • வரலக்ஷ்மி •**

டி.ஏ.ஜயலக்ஷ்மி • டி.ஆர்.ராமச்சந்திரன் • எல்.நாராயண ராவ் நடித்தது

டைரக்ஷன்: **கே.பி.நாகபூஷணம்**



# கல்கி பொருளடக்கம்



மலர் 8 இதழ் 41 | மே 8 | விரோதி ௵ சித்திரை 26௳



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்களும், சம்பவங்களும் கற்பனையே.

ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸரைப் பார்த்து இளைஞர் நரேந்திரர் "தாங்கள் கடவுளைப் பார்த்தது உண்டா?" என்று கேட்டார். "கடவுளை நான் பார்த்ததுண்டு; உனக்கும் காட்ட முடியும்!" என்றார் பரமஹம்ஸர். நரேந்திரர் ஸ்ரீ பரமஹம்ஸருடைய பிரதம சீடராகி ஸ்வாமி விவேகானந்தர் என்று உலகமெல்லாம் புகழ் பெற்றார்.

இளைஞர் நரேந்திரருக்கு உண்டான சந்தேகம் மனிதரில் பலருக்கும் சில சமயம் உண்டாவதுண்டு. நரேந்திரர் கேட்ட கேள்வியைப்போல் யாரையாவது கேட்கவேண்டும் என்று தோன்றுவதுண்டு. ஆனால் யாரையாவது கேட்டு என்ன பயன்? பதில் சொல்லக்கூடிய மகான்களைப் பார்த்தல்லவா அந்தக் கேள்வியைக் கேட்க வேண்டும்?

அத்தகைய மகான் இந்த நாளில் நம்மிடையே ஒருவர் எழுந்தருளியிருக்கிறார். அவர்தான் ரமண ரிஷிகள். "கடவுள் உண்டா?" என்று கேட்பவர்களுக்கு, "இதோ இருக்கிறான்!" என்று இறைவன் ஸ்ரீ ரமண மகரிஷியின் வாயிலாக அருள் புரிகிறார். மேனாட்டிலிருந்தும் கீழ் நாட்டிலிருந்தும் அறிவாராய்ச்சியில் சிறந்த மேதாவிகள் பலர் ஆத்ம சாந்தியை நாடி ரமண மகரிஷியைத் தேடி வந்திருக்கிறார்கள். நாடி வந்த பொருளை,—ஆத்ம சாந்தியை,—அடைந்திருக்கிறார்கள்.




பால உருவத்தில் பரம்பொருளைத் தேடிப் புறப்பட்ட ஸ்ரீ ரமணர் திருவண்ணாமலையில் பாதாள லிங்கக் குகையில் தமது மாதவத்தைத் தொடங்கினார். அந்தப் புனிதம் பெற்ற பாதாள லிங்கக் குகையில் இப்போது மிஸ்ஸஸ் தாளியார்க்கான் என்னும் பெண்மணி,—பக்த சிரோமணி,—ஆலயம் ஒன்று நிர்மாணித்திருக்கிறார். அதை நாளது மே மீ 14௳ திறந்து வைப்பதற்குச் சுதந்திர இந்தியாவின் கவர்னர்-ஜெனரல் ராஜாஜி விஜயம் செய்கிறார்.

பால ரமணர் தவந் தொடங்கிய நிலையைக் குறிப்பிடும் அவருடைய திவ்ய வடிவம் நமது இந்த இதழ் அட்டையைப் புனித மாக்குகிறது. பால ரமணரின் பால்வடியும் திருமுகத்தையும் கடுந்தவக் கோலத்தையும் கண்டு மனமுருகாத கல்நெஞ்சமும் இங்கு உண்டோ?




மலர் 8 } தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் { இதழ் 41

# என்ன சேதி?

## மந்திரிசபை விஸ்தரிப்பு

சென்னை பிரதமர் ஸ்ரீ குமாரஸ்வாமி ராஜாவும் ஸ்ரீ காமராஜ நாடாரும் சென்னை மந்திரி சபையை விஸ்தரித்து நிலைபேறுள்ள மந்திரி சபையை ஸ்தாபிக்கப் பெருமுயற்சி செய்தார்கள். அவர்களுடைய முயற்சி பூரண வெற்றி தரவில்லை. டாக்டர் சுப்பராயன் மந்திரி சபையில் சேர்ந்தால் தமிழ்நாட்டைப் பொறுத்தவரையில் ஒருவாறு கட்சிச் சண்டைகள் தீர்ந்து ஒற்றுமை நிலைபெற்றது என்று எண்ணுவதற்கு இடமுண்டு. அந்த நல்ல நிலைமை இன்னமும் ஏற்படவில்லை. டாக்டர் சுப்பராயன் தமக்குக் கட்சித் தேர்தலில் வோட்டு அளித்த ஸ்ரீ டி. பிரகாசம் கோஷ்டியையும் சேர்த்துக் கொண்டுதான் மந்திரி சபையில் வர முடியும் என்கிறார். ஸ்ரீ டி. பிரகாசம் அவர்களோ "இவ்வளவு ஸ்தானங்கள் கொடுத்தால் வருகிறேன்; இல்லாவிட்டால் வர முடியாது!" என்கிறார். ஆந்திர எம். எல். ஏ.க்களுக்குள் கோஷ்டிக் குழப்பம் பலமாயிருக்கிறது. ஸ்ரீ டி. பிரகாசம் காருவின் கோஷ்டிக்கும் அவரை எதிர்க்கும் ஆந்திர கோஷ்டிக்கும் ஏகப்பட்ட சண்டை. ஏற்கெனவேயுள்ள வேற்றுமை போதாது என்று சென்னை நகரம் சம்பந்தமான வேற்றுமை ஒன்று புதிதாகச் சேர்ந்திருக்கிறது. டாக்டர் பட்டாபி சீதாராமையாவும் அவருடைய கோஷ்டியாரும் சென்னையைத் தமிழ்நாட்டுக்குக் கொடுத்து விட்டாவது ஆந்திர மாகாணத்தை உடனே ஸ்தாபிக்க வேண்டும் என்று சொல்லுகிறார்கள். ஸ்ரீ பிரகாசம் கட்சியாரோ, "சென்னையைக் கொடுப்பதா? கூடவே கூடாது! சென்னை நகரத்தைத் தமிழ்நாட்டுக்குக் கொடுத்து விட்டு ஆந்திர மாகாணம் வந்துதான் என்ன பயன்?" என்று சொல்லுகிறார்கள். ஆகக்கூடி, ஆந்திர கோஷ்டிகள் ஒற்றுமைப் படுவதோ ஐக்கிய மந்திரி சபையை அமைப்பதோ இயலாத காரியம் ஆகிவிட்டது. கடைசியாக இப்போது மந்திரி சபை விஸ்தரிப்பு விஷயத்தை மத்திய பார்லிமெண்டரி போர்டுக்கு அனுப்பியிருக்கிறார்கள். மத்திய பார்லிமெண்டரி போர்டார் சென்னை மந்திரி சபை நாடகத்தில் எவ்வளவு தூரம் சம்பந்தப்படுவார்கள் என்று சொல்ல முடியாது. பஞ்சாபில் இதுபோலவே நேர்ந்த குழப்பத்தை மூன்றே நாளில் மத்திய பார்லிமெண்டரி போர்டார் தீர்த்து வைத்துவிட்டார்கள். ஆனால் சென்னை மாகாணத்து 'அதிகப் பிரசங்கி'களின் விஷயத்தில் "அவர்களுடைய கர்மபலனை அவர்களே அநுபவிக்கட்டும்!" என்று இதுவரை பார்லிமெண்டரி போர்டார் இருந்து வந்திருக்கிறார்கள். இனிமேல் அவர்களுடைய தலையீடு ஏற்படுமா என்று பார்க்க வேண்டும்.

## கனம் பெருமாள்சாமி ரெட்டியார்

தமிழ்நாட்டைப் பொறுத்தவரையில் ஆந்திர தேசத்திலுள்ள கட்சி வேற்றுமை தற்போது கிடையாது. இங்கேயுள்ள காங்கிரஸ் வாதிகள் எல்லாரும் பரிபூரணமாக ஒத்துழைத்து வேலை செய்யலாம்; ஐக்கிய மந்திரி சபையையும் அமைக்கலாம். தமிழ்நாட்டில் ஒற்றுமை நிலவுவதற்கு கனம் ஸ்ரீ பெருமாள்சாமி ரெட்டியார் வழிகாட்டியிருப்பது மகிழ்ச்சிக்குரிய விஷயம். சீலமும் ஒழுக்கமும் சிறந்த தேச பக்தியும் படைத்தவர் ஸ்ரீ பெருமாள்சாமி ரெட்டியார் அவர்கள்.

மூன்று வருஷத்துக்கு முன்னால், அதாவது தமிழ்நாட்டுக் காங்கிரஸுக்குள் வேண்டாத பிளவு ஏற்படுவதற்கு முன்னால், வட ஆற்காடு ஜில்லாவின் காங்கிரஸ் ஊழியர்கள் அனைவரும் ஸ்ரீ பெருமாள்சாமி ரெட்டியாரின் தலைமையில் ஒற்றுமைப்பட்டிருந்தார்கள். ராஜாஜியின் தலைமையை உறுதியாக ஆதரித்து அதனால் விளைந்த கஷ்ட நஷ்டங்களையெல்லாம் ஸ்ரீ பெருமாள்சாமி ரெட்டியார் பொருட்படுத்தாதிருந்தவர். தமிழ்நாடு காங்கிரஸ்வாதிகளுக்குள் இனிமேல் வேற்றுமையும் பிளவும் இருக்கக்கூடாது என்பதைச் செயலினால் காட்டுவதற்காகவே ஸ்ரீ பெருமாள்சாமி ரெட்டியார் புதிய மந்திரி சபையில் சேர்ந்திருக்கிறார்

என்று நம்புகிறோம். கைத்தொழில் வளர்ச்சி இலாகா அவரிடம் ஒப்படைக்கப்பட்டிருக்கிறது. நேர்மையான நிர்வாகத்துக்கு உதாரணமாக இருக்கும்படி மேற்படி இலாகாவை ஸ்ரீ ரெட்டியார் நிர்வகிப்பார் என்று எதிர்பார்க்கிறோம்.

## கேசரிகளின் கர்ஜனை!

சில மாதங்களாக அடங்கியிருந்த ஆந்திர கேசரிகளின் கர்ஜனை மீண்டும் காதைத் துளைக்க ஆரம்பித்திருக்கிறது. பாஷாவாரி மாகாணப் பிரிவினையால் குரோதமும் மாத்சரியமுமே அதிகமாகும் என்று தார் கமிஷன் கூறியபோது, ஆந்திரர்கள் வேதாந்தம் பேசினர். "தமிழர்களுடன் இவ்வளவு காலமாய் நாங்கள் அன்னியோன்னியமாக இருந்து வரவில்லையா? ஆந்திர மாகாணம் ஏற்பட்டுவிட்டால் எங்களிடையே இன்னும் அதிக அன்னியோன்னிய பாவம் நிலவும் என்பதில் சந்தேகமில்லை" என்று சொன்னார்கள். "சரி, தமிழர்கள் பெரும்பாலோராக உள்ள சென்னை நகரில் உங்களுக்கு உரிமையில்லை என்பதை நீங்கள் ஒப்புக் கொண்டால், ஆந்திர மாகாணம் ஏற்படுவதில் அதிகக் கஷ்டம் இராது" என்று மூவர் கமிட்டி சமீபத்தில் தீர்ப்புக் கூறியதைக் கேட்டதும், ஆந்திரர்களுக்குக் குரோதமும் மாத்சரியமும் பொங்குகின்றன!

"சென்னை நகரம் தமிழர்களுக்கு உரியது என்று சொல்வதாயின் எங்களுக்குத் தனி மாகாணமே வேண்டாம்" என்று அவர்கள் ஆர்ப்பாட்டம் செய்ய ஆரம்பித்திருக்கிறார்கள். "சென்னை நகரில் எங்களுக்குப் பங்கு கொடுக்க வேண்டும்; இல்லாவிடில் சென்னை நகரைத் தனி மாகாணமாகப் பிரிக்க வேண்டும். அவ்விதமின்றி அந்த நகரைத் தமிழர்கள் அநுபவிப்பதை நாங்கள் சகித்துக் கொண்டிருக்க முடியாது. அந்த நகரைத் தமிழ் மாகாணத்துடன் சேர்ப்பதாயின், ஆந்திர மாகாணக் கோரிக்கையையே இப்போதைக்கு நாங்கள் விட்டுவிடத் தயார்" என்று ஆந்திரர்கள் சொல்லுகிறார்கள். தன்னுடைய இரண்டு கண்களும் போனாலும் போகட்டும்; அண்டை வீட்டுக்காரனுக்கு ஒரு கண் போனால் போதும் என்பதுபோல இருக்கிறது அவர்களின் கூற்று!

பிரிட்டிஷ் மன்னர் ஆறாம் ஜார்ஜ் இனிமேல் இந்தியாவின் சக்ரவர்த்தியாகவோ அரசராகவோ இருக்க மாட்டார் என்பதாக முடிவாகியிருக்கிறது.

எனினும், அவருடைய வருஷாந்தரப் பென்ஷன் பிரச்னையைத் தீர்மானிப்பதற்கு ஸ்ரீ வி. பி. மேனன் இங்கிலாந்து போகவேண்டிய அவசியம் ஏற்படாது என நம்புகிறோம்.

## கண்டிக்கிறோம்

இந்தியாவின் பிரதம மந்திரி பண்டித ஜவஹர்லால் நேரு, உதவி பிரதம மந்திரி சர்தார் வல்லபாய் பட்டேல், காங்கிரஸ் அக்ராசனர் டாக்டர் பட்டாபி சீதாராமய்யா இந்த மூவரும் அடங்கிய கமிட்டியின் தீர்ப்பை எதிர்த்து ஆந்திரர்கள் கிளர்ச்சி செய்ய முற்பட்டிருப்பது மிகவும் கண்டிக்கத்தக்கது. மாகாணப் பிரிவினைப் பிரச்னையை யொட்டி அவர்களைக் காட்டிலும் பாரபட்சமின்றித் தீர்ப்புக் கூறும் அறிவும் ஆற்றலும் யோக்கியதாம்சங்களும் உள்ள நீதிபதிகள் வேறு எவரும் இருக்க முடியாது. சென்னை நகரம் தமிழர்களுக்குச் சொந்தம் என்பது சரித்திரம் கண்ட உண்மை. அது தான் ஜனநாயக முறைக்கும் உடன்பாடானது. அப்படியிருக்க, சென்னை நகரின் எதிர்காலத்தைத் தங்களுடைய இஷ்டப்படி நிர்ணயிக்க வேண்டும் என்று கூற ஆந்திரர்களுக்கு ஏது உரிமை?

## போபால் சமஸ்தானம்

இந்தியாவில் ஹைதராபாத்துக்கு அடுத்தபடியாக பெரிய முஸ்லிம் சமஸ்தானமான,—அதாவது முஸ்லிம் மன்னரைத் தலைவராகக் கொண்ட போபாலின் நிர்வாகத்தை இந்திய சர்க்காரிடம் ஒப்புவிக்க போபால் நவாப் இணங்கிவிட்டார் என்ற செய்தி மகிழ்ச்சியைக் கொடுக்கிறது. மேற்படி சமஸ்தானம் ஏழாயிரம் சதுர மைல் விஸ்தீர்ணம் உள்ளது; எட்டு லட்சம் ஜனத்தொகை கொண்டது; ஒரு கோடி ரூபாய்க்குமேல் வருமானம் உடையது. ஹைதராபாத் நைஜாமைப் போல் இராமல், போபால் நவாப் அரசியல் விஷயங்களில் தீவிரமாகக் கலந்துகொள்ளும் சுபாவம் உள்ளவர். இந்தியாவின் விதியை நிர்ணயிப்பதற்காக நடந்த லண்டன் வட்டமேஜை மகாநாடுகளில் அவர் கலந்து கொண்டதுடன், காங்கிரஸ்—முஸ்லிம் லீக் சமரசப் பேச்சுவார்த்தைகளிலும் அவர் முக்கிய பங்கெடுத்துக் கொண்டது உண்டு. எனவே, போபால் நவாப் ஹைதராபாத் நைஜாமைப் பின்பற்றி சங்கடத்தில் அகப்பட்டுக் கொள்ளாமல் காலப்போக்கை அறிந்து இந்திய சர்க்காரிடம் தம்முடைய சமஸ்தான நிர்வாகத்தை ஒப்படைக்க முன்வந்ததில் வியப்பில்லை அல்லவா?

# மதிப்பு உயர்ந்தது!

மகாநாடு கூடுவதற்கு முன்....

காமன்வெல்த் மகாநாடு

பிரிட்டன்

இலங்கை

கனடா

தென்னாப்பிரிக்கா

இந்தியா

பாகிஸ்தான்

மகாநாடு முடிந்த பின்....!

காமன்வெல்த் மகாநாடு

எங்களைக் கவனிப்பாரில்லையா? நாங்கள் என்ன களிமண்ணா?

இந்தியா

பாகிஸ்தான்

இலங்கை

கனடா

இடத்தைக் கொடுத்தால் மடத்தைப் பிடுங்கும் என்று சொல்வதற்கொப்ப, காஷ்மீர் முழுவதையும் கபளீகரம் செய்யப் பாகிஸ்தான் முயற்சித்து வருகையில், காஷ்மீரைப் பாதுகாக்க வேண்டிய ஐக்கிய நாடுகள் சபைக் கமிஷன் தூங்கிக் கொண்டிருக்கிறது.

# புதிய தத்துவம் பிறந்தது!

சுமார் இருபது ஆண்டுகளுக்கு முன்,—1929-ம் வருஷம் டிசம்பர் மாதம் 31-ந் தேதி இரவு பன்னிரண்டு மணிக்கு லாகூரில் நடந்த காங்கிரஸ் மகா சபைக் கூட்டத்தில் ஒரு தீர்மானம் நிறைவேறியது.

இந்தியா பிரிட்டிஷ் டொமினியன் நாடுகளில் ஒன்ருக இருப்பதா? அல்லது பரிபூரண சுயேச்சை நாடாக விளங்குவதா? என்ற கேள்விக்குப் பதில் என்ன என்பதைச் சந்தேகத்துக்கு இடமின்றி நிர்ணயிப்பதே நடுநிசியில் நிறைவேறிய அந்தத் தீர்மானத்தின் நோக்கம்.

அந்த வருஷம் டிசம்பர் மாதம் 31-ந் தேதிக்குள் பிரிட்டிஷ் சர்க்கார் இந்தியாவுக்கு டொமினியன் அரசியல் அந்தஸ்து அளித்தால், அதை அங்கீகரிப்பதென்று காங்கிரஸ் மகாசபை முடிவு செய்திருந்தது.

ஆனல், அவர்கள் டொமினியன் அந்தஸ்து அளிக்கவில்லை.

எனவே, பூரண சுயேச்சைக்கு இம்மியளவும் குறைந்த எவ்வித அரசியல் திட்டத்தையும் ஏற்க முடியாது என்று லாகூர் காங்கிரசில் தலைவர்கள் முடிவு செய்தனர்.

இந்தியாவின் எதிர்கால அந்தஸ்தை நிர்ணயிக்கும் அந்தத் தீர்மானம் நிறைவேறுவதற்கு முக்கிய காரண புருஷராக இருந்தவர் லாகூர் காங்கிரசின் அக்ராசனர் பீடத்தை அலங்கரித்த பண்டித ஜவாஹர்லால்நேருதான் என்பதை ஞாபக மூட்டுகிறேம்!

ஆனல், அந்த முடிவை அப்போது பிரிட்டிஷ் சர்க்கார் ஏற்க மறுத்துக் கொடிய அடக்கு முறைகளைக் கையாண்டார்கள்.

காங்கிரஸ் தலைவராக இருந்த அதே பண்டித ஜவாஹர்லால்நேரு இப்போது இந்திய சர்க்கார் தலைவர் என்ற முறையில் அதே பிரச்னையைத் தீர்க்க நேர்ந்ததும், அக்காலத்தில் அதற்கு இணங்க மறுத்த பிரிட்டிஷ் சர்க்கார் இப்போது ஜவாஹர்லால்ஜியை லண்டனுக்கு வருந்தி அழைத்து அவரது ஆலோசனையின்படி நடக்க நேர்ந்ததும் கால மாறுதலின் விசித்திரம் அல்லவா?

இந்தியா பூரண சுயேச்சை நாடாக விளங்கவேண்டும் என்று பல ஆண்டுகளுக்கு முன்பே காங்கிரஸ் மகாசபை முடிவு செய்துவிட்டது. இந்தியா சுதந்திரம் பெற்ற பிறகு தயாரிக்கப்பட்ட இந்திய அரசியல் திட்ட நகலிலும் இந்தியா பூரண சுயேச்சைக் குடியரசாக இருக்க வேண்டும் என்று குறிப்பிடப் பட்டிருக்கிறது. எனவே, இன்னும் சில மாதங்களில் பாரத நாடு சட்டபூர்வமான சுயேச்சைக் குடியரசாக விளங்கும் என்பதில் சந்தேகமில்லை.

இந்தியக் குடியரசுக்கும் பிரிட்டனுக்கும் தொடர்பு இருப்பது சாத்தியமா? காமன்வெல்த் மண்டலத்தில் இந்தியாவின் அந்தஸ்து என்ன? இவைபோன்ற கேள்விகள், இந்தியா சுதந்திரம் பெற்றதிலிருந்து பல நாடுகளையும் பல ராஜ தந்திரிகளையும் திணற அடித்து வந்தன.

லண்டனில் நடந்த டொமினியன் பிரதம மந்திரிகள் மகாநாட்டில், இந்தியக் குடியரசும் காமன்வெல்த் மண்டலத்தில் அங்கம் வகிக்கலாம் என்று தீர்மானம் செய்திருக்கிறர்கள்.

மற்ற டொமினியன் நாடுகளில், கவர்னர் ஜெனரல் முதல் பல்வேறு உத்தியோகஸ்தர்களையும் பிரிட்டிஷ் மன்னரே நியமிப்பார். அந்த நாடுகளில் உத்தியோகஸ்தர்கள் யாவரும் பிரிட்டிஷ் மன்னரிடம் விசுவாசப் பிரமாணம் செய்து கொள்ளவேண்டும்.

ஆனல் இந்தியா சம்பந்தப்பட்ட வரையில், உள்நாட்டு விவகாரங்களிலோ வெளிநாட்டு விவகாரங்களிலோ தலையிட இனிமேல் பிரிட்டனுக்கு எவ்வித உரிமையும் இல்லை.

பல அங்கத்தினர்கள் அடங்கிய ஒரு சங்கத்துக்கு அக்ராசனர் என்று ஒருவர் இருப்பது போலவே, இந்தியா சம்பந்தப்பட்ட வரையில் பிரிட்டிஷ் மன்னர் இருந்து வருவார்.

எனினும் டொமினியன் நாடுகளுக்கு உள்ள வர்த்தக சலுகைகள் இந்தியாவுக்கு உண்டு.

இந்தியாவில் இனி கவர்னர் ஜெனரலை நியமிக்கும் அதிகாரம் பிரிட்டிஷ் மன்னருக்கு இல்லை. இனிமேல்

இந்திய ஜனங்களாலேயே குடியரசுத் தலைவர் தேர்ந்தெடுக்கப் படுவார்.

பிரிட்டன் தன்னுடைய உரிமையையும் விட்டுக் கொடுத்து, சலுகைகளும் அளித்து இந்தியாவை காமன்வெல்த் மண்டலத்தில் வைத்துக் கொள்ள விரும்புவதன் மர்மம் என்ன?

நீண்ட காலமாக இந்தியாவுக்கும் தனக்கும் இருந்து வரும் தொடர்பை அடியோடு இழந்து விட பிரிட்டன் விரும்பவில்லை.

ஆசியாவுக்கு மாத்திரமின்றி, உலகம் முழுவதற்கும் சுதந்திரத்துக்கும் சமாதானத்துக்கும் வழி காட்டும் பேராற்றல் வாய்க்கப் பெற்றுள்ள இந்தியாவின் நட்பை பிரிட்டன் இழக்கத் துணியவில்லை.

அவ்விஷயமாக பிரிட்டன் கொண்டுள்ள சிரத்தைக்கு மூன்றாவதாகவும் ஒரு காரணம் உண்டு. பிரிட்டிஷ் காமன்வெல்த்திலுள்ள ஐம்பது கோடி ஜனங்களில் முப்பது கோடி பேர் இந்தியாவில் இருக்கிறார்கள். எனவே அதில் இந்தியா பங்கெடுத்துக் கொள்ளவில்லையெனில் காமன்வெல்த் கடுகளவாகி நாளடைவில் மறைந்தும் விடலாம்!

காமன்வெல்த் மண்டலத்தில் இந்தியா இருப்பதால், பிரிட்டன் யுத்தத்தில் இறங்கும்படி நேரும் போது இந்தியா தனித்து நிற்க முடியாது என்று சிலர் கருதுகிறார்கள்.

இது முற்றிலும் தவறான அபிப்பிராயமாகும்.

உதாரணமாக, அயர்லாந்து பிரிட்டனை அடுத்துள்ள பிரிட்டிஷ் டொமினியன் நாடுகளில் ஒன்றாகவும் இருந்தும் கூட, அதைச் சென்ற மகாயுத்தத்தில் கலந்து கொள்ளும்படி பிரிட்டனால் வற்புறுத்த முடியவில்லை. இறுதிவரையில் அந்த நாடு நடுநிலைமையே வகித்தது.

தன்னுடன் நெருங்கிய தொடர்புள்ள அயர்லாந்தை யுத்தத்தில் இழுக்க பிரிட்டனால் முடியாதபோது, வெகு தொலைவிலுள்ள சுதந்திர இந்தியாவை அதன் இஷ்டத்துக்கு விரோதமாக இழுத்துவிட முடியுமா?

தவிர, கொள்கையிலும் பூகோள அமைப்பிலும் மற்றும் பல வகையிலும் பரஸ்பரம் எவ்விதத் தொடர்புமில்லாத ருஷ்யாவும் பிரிட்டனும் சென்ற மகாயுத்தத்தில் தோளோடு தோள் நின்று பகைவர்களை எதிர்த்து நின்றது என்பதையும் நாம் மறந்து விடக்கூடாது.

அதுபோலவே இந்தியா போரில் இறங்குவதோ அல்லது போரைத் தவிர்ப்பதோ, பிரிட்டனையோ அல்லது வேறு ஏதாவது ஒரு வல்லரசையோ பொறுத்ததல்ல; இந்தியாவின் நலன், இந்தியத் தலைவர்களின் அபிப்பிராயம், இந்திய மகாஜனங்கள் செய்யும் முடிவு இவற்றையே பொறுத்ததாக இருக்கும்.

கடற்படை, தரைப்படை, விமானப்படை போன்ற நவீன யுத்த சாதனங்களின் பலம் அதிகமில்லாத இந்தியா பிரிட்டனுடனும் மற்ற காமன்வெல்த் நாடுகளுடனும் உறவு கொள்வது நன்மையே என்பதையும் நாம் ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும்.

"உலகில் அமைதியை நாடுவதே இந்தியாவின் கொள்கை. அதைவிட்டு இந்தியா எந்த ராணுவ கோஷ்டியுடனோ அல்லது அரசியல் கோஷ்டியுடனோ சேராது என்பது நிச்சயம். இப்போது ஏற்பட்டுள்ள காமன்வெல்த் ஒப்பந்தத்தினால் இந்தியாவுக்கு நன்மை, பிரிட்டனுக்கு நன்மை, காமன்வெல்த் நாடுகளுக்கு நன்மை, உலகத்துக்கும் நன்மை" என்று ஜவாஹர்லால்ஜி லண்டனில் தெளிவாகக் கூறியிருக்கிறார்.

* * *

குடியரசு இந்தியாவின் அரசியல் அந்தஸ்துக்கு அணுவளவும் குந்தகம் ஏற்படாமல் காமன்வெல்த் மண்டலத்தில் இருப்பதற்குற்ற வழியைக் கண்டுபிடித்து பிரிட்டிஷ் ராஜதந்திரிகளுக்கு உற்சாகத்தை அளித்த பெருமை பண்டித ஜவாஹர்லால் நேருவுக்கே உரியது என்று பிரிட்டிஷ் பத்திரிகைகள் பாராட்டுகின்றன.

நமது அருமைத் தலைவர் காமன்வெல்த் மகாநாடு முடிந்து அயர்லாந்துக்குச் சென்றிருந்தபோது, ஐரிஷ் பார்லிமெண்டில் அமோகமாக வரவேற்கப் பட்டார். இதற்கு முன் வேறு எவருக்கும் ஐரிஷ் பார்லிமெண்டு சபை அத்தகைய கௌரவம் அளித்ததில்லை.

எனவே, பண்டித ஜவாஹர்லால் நேரு, காமன்வெல்த் மகாநாட்டுக்குச் சென்றதன் மூலம், குடியரசு நாடும் காமன்வெல்த் மண்டலத்தில் இடம் பெறலாம் என்ற புதிய அரசியல் தத்துவம் பிறந்தது! பண்டித நேருவின் அரசியல் மேதையை அறிந்து கொள்ள பிரிட்டிஷ் டொமினியன் ராஜதந்திரிகளுக்குச் சந்தர்ப்பம் வாய்த்தது! பாரத நாட்டின் பெருமை பாரெங்கும் பன்மடங்கு உயர்ந்தது.

# பேனா வீரர்கள்

ரா. கி.

தனித் தனியே ஒவ்வொருவரும் பதினாயிரம் பேருக்குச் சமமானவர்கள்; எப்படிப்பட்ட எதிரிகளையும் அவர்களுடைய எதிர்ப்புகளையும் தவிடு பொடியாக்கக் கூடியவர்கள்; கொடுங்கோலர்களின் சர்வாதிகாரத்தை நிர்மூலமாக்கக் கூடியவர்கள்: அக்கிரமக்காரர்களுக்குச் சுடச் சுடச் சவுக்கடி கொடுத்து நீதியை நிலை நாட்டக் கூடியவர்கள்: திடீரென்று வெடிகுண்டுகளைத் தூக்கிப் போட்டு உலகத்தை கடுகடுங்கச் செய்ய வல்லவர்கள். அரசியல் வாதிகளின் சூழ்ச்சிகளை அம்பலப்படுத்தி விடுகிறவர்கள்; போலி வேஷதாரிகளின் முக மூடிகளைக் கிழித்தெறிந்து அவர்களுடைய உண்மை ஸ்வரூபத்தை வெளிப்படுத்துகிறவர்கள்; பிரகஸ்பதிகளின் பேச்சுக்களைப் பிதற்றல்கள் என்று காட்டுகிறவர்கள்; மன்னர்களை மண்ணைக் கவ்வும்படி செய்கிறவர்கள்; மந்திரிகளைச் சின்ன பின்னமாக்குகிறவர்கள்;-இப்படிப்பட்ட பேனா வீரர்கள் சில நாளைக்கு முன்பு சென்னை மாநகரில் மகாநாடு கூடினார்கள்.

முன்னொரு தடவை "பேனா மன்னர்கள்" என்ற தலைப்புடன் "கல்கி"யில் ஒரு கட்டுரை வெளியாகியிருந்தது. அகில இந்தியாவிலிருந்தும் சென்னைக்கு விஜயம் செய்திருந்த பத்திரிகாசிரியர்களுக்குப் "பேனா மன்னர்கள்" என்ற பட்டம் அளிக்கப் பட்டிருந்தது.

அந்தப் பத்திரிகாசிரியர்களைப் "பேனா மன்னர்கள்" என்று சொல்லலாமெனில் இப்போது மகாநாடு கூடிய பத்திரிகையாளர்களைப் "பேனா வீரர்கள்" என்று சொல்வது பொருத்தமேயாகும். ஏனெனில் இந்தப் பேனா வீரர்களின் உதவியைக் கொண்டுதான் அந்தப் பேனா மன்னர்கள் தங்கள் ராஜ்யங்களை ஸ்தாபித்து அரசாளுகிறார்கள். வீரர்கள் இல்லையென்றால் மன்னர்களும் இல்லை தானே?

இந்தக் கட்டுரையின் முதல் பாராவில் பேனா வீரர்கள் செய்யக்கூடிய அதி பயங்கர சாகஸச் செயல்களைக் குறித்து எழுதப்பட்டிருக்கிறது. நேயர்கள் அதையெல்லாம் அப்படி அப்படியே வார்த்தைக்கு வார்த்தை சரி என்று எண்ணி விடக்கூடாது. பத்திரிகைத் தலைப்புகளிலும் தலையங்கங்களிலும் சாதாரணமாகக் கையாளப்படும் சொற்றொடர்களையும் பிரயோகங்களையும் கோத்து மேற்படி முதல் பாரா எழுதப் பட்டிருக்கிறது. தினந்தோறும் கொட்டை எழுத்துப் பத்திரிகைத் தலைப்புகளில் எத்தனை சவுக்கடிகளையும், தவிடுபொடிகளையும், மண்ணைக் கவ்வுதல்களையும் நாம் பார்க்கிறோம்?—எல்லாம் பேனாப் போர் முனையிலே நடக்கிற வீரச்செயல்கள்தான்! அதனால் அவை நகைக்கத் தக்க காரியங்கள் ஆகிவிடுமா? ஒரு நாளும் இல்லை. "துப்பாக்கி முனையைக் காட்டிலும் பேனா முனை வலிமை யுடையது" என்பது தற்காலத்தில் அனைவரும் ஒப்புக் கொள்ளும் உண்மையாகும்.

"ஒவ்வொருவரும் பத்தாயிரம் பேருக்குச் சமமானவர்கள்" என்று இக்கட்டுரை ஆரம்பத்தில் குறிப்பிட்டிருக்கிறது. இது அதிசயோக்தியா? அல்லது மிகைப்படுத்தலா? அல்லது அர்த்தமற்ற சொற்றொடரா?—ஒரு நாளும் இல்லை.

"இந்தப் பத்திரிகையாளர் கூட்டத்தைக் காட்டிலும் எத்தனையோ மடங்கு பெரிய பிரம்மாண்டமான பொதுக் கூட்டங்களைத் தாங்கள் பார்த்திருப்பீர்கள். ஆனால் ஒரு விஷயம். இந்த மகாநாட்டிற்கு வந்திருக்கும் ஒவ்வொருவரும் பத்தாயிரம் வாசகர்களின் பிரதிநிதி!" என்று பிரதமர் கனம் குமாரசாமி ராஜா அவர்களிடம் இந்தக் கட்டுரையாளர் கூறினார். அதற்குக் கனம் பிரதமர் என்ன பதில் அளித்தார் தெரியுமா?

"பத்தாயிரம் பேர்தானா? அது என்ன அவ்வளவு குறைத்து மதிப்பிடுகிறீர்கள்? ஐம்பதினாயிரம் அறுபதினாயிரம் எல்லாம் எங்கே போச்சு?" என்றார்!

உண்மைதான்; தென்னாட்டில் ஐம்பதினாயிரம், அறுபதினாயிரம் பிரதிகள் செலவாகும் பத்திரிகைகளும் இருக்கத்தான் செய்கின்றன. ஆனால் சில பத்திரிகைகள் பத்தாயிரத்துக்குக் குறைவாகவும் செலவாகின்றன. எல்லாப் பத்திரிகைகளுக்

ரும் சராசரிக் கணக்குப் போட்டுப் பார்த்தால், குறைந்தபட்சம் ஒவ்வொரு பத்திரிகையாளரும் பத்தாயிரம் வாசகர்களுக்குப் பிரதிநிதியாவார் என்று சொல்லுவது மிகை யாகா தல்லவா?

•  •  •

பத்திரிகைகளுக்குச் செய்தி அனுப்பும் நிருபர்களின் சக்தி அபாரமானது.

சமீபத்தில் நான் கேள்விப்பட்ட சம்பவம் ஒன்றைச் சொல்கிறேன். இந்தியாவின் முக்கிய நகரம் ஒன்றில் "அகில உலகப் பிரச்னை ஆராய்ச்சிச் சங்கம்" என்பதாக ஒரு சங்கம் உண்டு. அந்தச் சங்கத்தில் ஒரு நாள் டாக்டர் லங்காநாதன் என்பவர் பிரசங்கம் செய்வார் என்று அறிவிக்கப்பட்டிருந்தது.

மேற்படி சங்கத்தின் கட்டிடம் இருந்த வீதியில் ஒரு மனிதர் போய்க்கொண்டிருந்தார். அவரோடு இன்னொரு மனிதர் வந்து சேர்ந்து கொண்டார்.

**முதல் மனிதர்**:—ஐயா! தாங்கள் எங்கே போகிறீர்களோ?

**இரண்டாம் மனிதர்**:—அகில உலக ஆராய்ச்சிச் சங்கத்துக்குப் போகிறேன்.

**மு. மனிதர்**:—சங்கத்தில் இன்று பிரசங்கம் இருக்கிறதல்லவா? தாங்கள் பிரசங்கத்துக்குத்தான் போகிறீர்களோ?

**இ. மனிதர்**:—ஆமாம், சார்! ஆமாம்! யாரோ டாக்டர் லங்காநாதனாம்! பிரமாத பிரசங்கம் பண்ணப் போகிறாராம், பிரசங்கம் என்ன, ஸார், வேண்டிக் கிடந்தது? லங்காநாதன் என்றால் இலங்கைக்குப் போய்ப் பிரசங்கம் செய்கிறது தானே? இங்கே என்னத்திற்கு வந்து நம் பிராணனை வாங்குகிறார்? தலையில் எழுத்து.—நானும் போய்த் தொலைய வேண்டியதா யிருக்கிறது.

**மு. மனிதர்**:—(மௌனம்.)

இரண்டு பேரும் சங்கக் கட்டிடத்துக்குப் போய்ச் சேர்ந்தார்கள். அங்கே அதிகம் பேர் வந்திருக்கவில்லை. நாலைந்து பேர்தான் இருந்தார்கள். ஆனாலும் பிரசங்கம் ஆரம்பமாயிற்று. பிரசங்கம் ஆரம்பித்ததும் இரண்டாவது மனிதருக்கு ஓர் உண்மை தெரிய வந்தது. அதாவது வீதியில் தாம் சந்தித்த முதல் மனிதர் தான் டாக்டர் லங்காநாதன் என்பது.

இரண்டாவது மனிதருக்குச் சிறிது பச்சாத்தாபம் ஏற்பட்டது. டாக்டர் லங்காநாதனுடைய மனதைத் தாம் புண்படுத்தியதற்குப் பரிகாரம் செய்ய வேண்டும் என்று நினைத்தார். பரிகாரம் செய்யும் சக்தி அவரிடம் இருந்தது.

அன்று டாக்டர் லங்காநாதனுடைய பிரசங்கத்தைக் கேட்டவர்கள் நாலைந்து பேர்தான் என்றாலும் மறுநாள் இந்திய தேசமெங்கும் நாலைந்து லட்சம் வாசகர்கள் மேற்படி லங்காநாதனுடைய பிரசங்கத்தைப் பத்திரிகைகளில் சாங்கோபாங்கமாகப் படித்தார்கள்!

அந்த இரண்டாவது மனிதர் அஸோஸியேடட் பிரஸ் ஸ்தாபனத்தின் பிரதிநிதி. ஆகையால் பிரசங்கத்தைத் தந்தியில் தேசமெங்கும் அனுப்பிவிட்டார்.

இதிலிருந்து ஏற்படுவது என்ன? ஐந்நூறு லட்சம் பேர் அடங்கிய மாபெருங் கூட்டத்தில் பேசுவதும் சரி, ஒரே ஒரு பத்திரிகைப் பிரதிநிதியின் முன்பு பேசுவதும் சரி என்பதுதான்!

போதும்; நானும் ஒரு பத்திரிகையாளனாதலால், பத்திரிகையாளரின் பெருமையைப் பற்றி ரொம்பவும் ஜம்பம் அடித்துக் கொள்ளாமல் மேலே போகலாம்.

•  •  •

தென்னிந்தியப் பத்திரிகையாளர் சம்மேளனத்தின் ஆண்டு விழா சென்ற சில வருஷ காலமாகச் சென்னையில் நடைபெற்று வருகிறது. இந்த வருஷத்திலும் அந்த விழா சிறப்பாக நடந்தது.

புதிய பிரதமர் கனம் குமாரசாமி ராஜா மகாநாட்டைத் திறந்துவைத்துப் பத்திரிகையாளரின் கடமைகளையும் உரிமைகளையும் பொறுப்புக்களையும் நன்றாக எடுத்துக் கூறினார்.

சென்ற நாலு வருஷமாக 'ஹிந்து' பத்திரிகையின் பிரதம உதவி ஆசிரியர் ஸ்ரீ என். ரகுநாதன் சம்மேளனத்தின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டு வருகிறார். அவருடன் போட்டிக்கு நிற்பதற்கு யாரும் முன் வர வில்லை. இது எனக்குச் சிறிது வியப்பாகத்தான் இருந்தது. ஆனால் இந்த வருஷ மகாநாட்டின் நடவடிக்கைகளைக் கவனித்ததில் வியப்புத் தீர்ந்து விட்டது. எதற்காக இன்னொருவர் போட்டிக்கு நிற்க வேண்டும்? ஸ்ரீ ரகுநாதனைக் காட்டிலும் பத்திரிகையாளரின் உரிமைகளையும் நலன்களையும் பாதுகாப்பதில் சிரத்தை உள்ளவர் வேறு யார்? அல்லது பத்திரிகையாளரின் நலத்துக்காகப் போராடுவதில் அவரைக் காட்டிலும் திறமைசாலிதான் வேறு யார்?—ஒருவரும் இருக்க முடியாதுதான்.

ஸ்ரீ ரகுநாதன் பத்திரிகையாளரின் முன்னுள்ள பல முக்கியப் பிரச்னைகளைப்

பற்றியும் சாங்கோபாங்கமாகத் தமது தலைமை உரையில் கூறினார்.

• • •

பத்திரிகையாளரின் மகாநாட்டில் சில முக்கியமான தீர்மானங்கள் விவாதத்துக்கு வந்தன. அவற்றுள் ஒன்று பத்திரிகைத் தொழிலாளரின் சம்பளம் முதலிய நல உரிமைகளைப் பற்றியது.

முன்னெல்லாம் நம் நாட்டில் பத்திரிகைத் தொழில் பெரும்பாலும் ஒரு மிக முக்கியமான தேசத் தொண்டாகக் கருதப் பட்டது. பத்திராசிரியர்கள் பல தியாகங்களைச் செய்யவேண்டியிருந்தது. சர்க்காரின் அடக்கு முறைகளுக்கு அவர்கள் உள்ளாக வேண்டியிருந்தது. பெரும்பாலும் பத்திரிகைகள் கஷ்டத்தில் நடந்தன.

இப்போது நிலைமை ஓரளவு மாறியிருக்கிறது. பத்திரிகை படிப்போரின் தொகை ஏராளமாகப் பெருகியிருக்கிறது. பல பத்திரிகைகள் லாபத்தில் நடைபெறுகின்றன. பத்திரிகைத் தொழிலின் கஷ்டங்களும் பத்திரிகையாளர் செய்ய வேண்டியிருந்த தியாகங்களும் குறைந்து விட்டன. பிரிட்டிஷ் சர்க்காரின் அடக்கு முறைப் படலம் முடிவடைந்து விட்டது.

பத்திரிகைகளின் அந்தஸ்து உயர்ந்திருப்பதை யொட்டி உதவி ஆசிரியர்களும் நிருபர்களும் நல்ல திறமைசாலிகளாக இருக்க வேண்டியிருக்கிறது.

இதற்கெல்லாம் தகுந்தாற்போல் பத்திரிகையாளரின் சம்பளமும் வசதிகளும் உயரவேண்டும் அல்லவா? எல்லாரையும் பாதிக்கும் அகவிலை ஏற்றம் பத்திரிகையாளரையும் பாதியாமல் போகுமா?

இதையெல்லாம் உத்தேசித்துப் பத்திரிகையாளர் தங்கள் சொந்த யோகக்ஷேமங்களில் கவனம் செலுத்தத் தொடங்கியுள்ளார்கள். சில பத்திரிகைச் சொந்தக்காரர்கள் கேட்பதற்கு முன்னாலேயே நியாயம் செய்து விட்டார்கள். பத்திரிகையாளருக்கு நல்ல சம்பளம் முதலியவை கொடுத்து வருகிறார்கள். வேறு சில பத்திரிகை முதலாளிகளைப் பற்றி அவ்விதம் சொல்லுவதற்கில்லை.

பத்திரிகையாளரின் சம்பளத்தை உயர்த்த வேண்டும் என்று ஒரு தீர்மானம் மகாநாட்டில் வந்தது. இந்த கெஞ்சு மணியத்தினால் பயனில்லை யென்று சில பத்திரிகையாளர் கருதினார்கள். தீவிரமாகப் போராட வேண்டும் என்றும், அதற்காகப் பத்திரிகையாளரின் சம்மேளனத்தை டிரேட் யூனியனாக அமைக்க வேண்டும் என்றும் "சுதேசமித்திரன்" ஸ்ரீ என். பாஷ்யம் ஒரு பிரேரணை கொண்டு வந்தார். அந்தப் பிரேரணையைச் சிலர் வன்மையாக ஆதரித்தார்கள்.

"இன்மணி" வெங்கடாச்சாரியார், "ஹிந்துஸ்தான்" நாராயண ஐயங்கார், அரத்துக்குடி கிட்டு முதலியவர்கள் தீர்மானத்தை எதிர்த்தார்கள். "டிரேட் யூனியன்" ஆனவுடனே நிலைமை மாறிவிடாது என்று எடுத்துக் காட்டினார்கள். டிரேட் யூனியன்கள் நடத்திய பல போராட்டங்கள் தோல்வி யடைந்திருக்கின்றனவென்றும் சொன்னார்கள்.



குமாரி லாராவின் பரத நாட்டிய அரங்கேற்றம் தியாகராஜநகர் வாணி மஹாலில் நடைபெற்ற போது, வாணி மஹால் வாசலில் ஆயிரம் மோட்டார்கள் வரிசையாக நின்றன! வாணி மகாலுக்குள்ளே சென்னையின் பிரபலமான குடும்பத்தினர் அநேகர் பெரும் விஜயம் செய்திருந்தார்கள். குமாரி லாரா, சுந்தரம் மோட்டார் கம்பெனியின் டைரக்டர் ஸ்ரீ டி. வி. எஸ். துரைசாமி அவர்களின் செல்வப்புதல்வி. பரதநாட்டியப் பேராசிரியர் வழுவூர் ஸ்ரீ ராமையாப் பிள்ளையிடம் நாட்டியக் கலை பயின்று, ரசிகர்களும் பிரமுகர்களும் அடங்கிய மகா சபையில் அரங்கேற்றப் புகழ் பெற்ற குமாரி லாராவுக்கு ஆசி கூறுகிறோம்.

"பத்திரிகையாளர் என்பவர் பத்திரிகைத் தொழிலில் உள்ள ஆசையினாலேயே அதற்கு வருகிறார். கடிகாரத்தைப் பார்த்துக் கொண்டு வேலை செய்யும் டிரேட் யூனியன் மனப்பான்மை உள்ள மனிதர் ஒரு நாளும் நல்ல பத்திரிகையாளராக முடியாது!" என்று ஸ்ரீ காஸா சுப்பராவ் எடுத்துக் கூறினார்.

பார்த்தால் பரம சாதுவாகத் தோன்றும் ஸ்ரீ என். ரகுநாதன் நல்ல இடிமுழக்கக் குரலும், மகாநாட்டில் கட்டுப்பாட்டை நிலைநாட்டி ஒழுங்காக நடத்தும் திறனும் படைத்தவர். அவர் கடைசியாகக் கூறிய வாதம் விஷயத்தைப் பைசல் செய்து விட்டது. "டிரேட் யூனியன் என்றால், பாதிப் பேர் நம்மிலிருந்து பிரிந்துபோய் விடுவார்கள். எல்லாரும் ஒன்றுபட்டிருக்கும் போதே சாதிக்க முடியாத காரியத்தைப் பிளவுபட்ட பிறகு எப்படிச் சாதிக்க முடியும்?" என்றார் ஸ்ரீ என். ரகுநாதய்யர். பல நண்பர்களின் பிடிவாத வேண்டுகோளின் பேரில் ஸ்ரீ பாஷ்யம் தாம் கொண்டுவந்த தீர்மானத்தை வாபஸ் வாங்கிக் கொண்டார்.

* * *

அடுத்த முக்கியமான தீர்மானம் பத்திரிகைகளுக்கு விற்பனை வரியும் விளம்பர வரியும் போடக் கூடாது என்பது. இதை "ஹிந்து" உதவி ஆசிரியர் ஸ்ரீ எஸ். பார்த்தசாரதி கொண்டுவந்தார்.

பத்திரிகை முதலாளிகளிடம் கோபம் கொண்டிருந்த சிலர் "வரி போட்டால் என்ன?" என்று வாதமிட்டார்கள்.

சின்னப் பத்திரிகைக்காரர்கள் எல்லாரும் மேற்படி வரிகளைப் பலமாக ஆட்சேபித்தார்கள். விற்பனை வரியும் விளம்பர வரியும் சின்னப் பத்திரிகைகளைக் கொன்று விடும்; புதிய பத்திரிகைகள் ஆரம்பிப்பதை ரொம்பவும் கஷ்டமாகச் செய்து விடும் என்றும் எடுத்துக் காட்டினார்கள்.

விளம்பரம் தேடுவதிலுள்ள கஷ்டமும் தேடிப் பிரசுரித்த பிறகு விளம்பரத் தொகையை வசூலிக்கும் கஷ்டமும் சின்னப் பத்திரிகைக்காரர்களுக்கு நன்றாய்த் தெரியும். "சீர்திருத்தம்" ஆசிரியர் ஸ்ரீ என். முத்துக் குமார சாமிப் பாவலர் இதைப்பற்றி ரஸமாக ஒரு விஷயம் சொன்னார். "விளம்பரத்தைப் போட்டவுடனே சர்க்கார் வரி கொடுத்துவிட வேண்டுமா அல்லது விளம்பரப் பணம் வசூலித்த பிறகு வசூல் தொகையில் வரிபோட்டு எடுத்துக் கொள்ளப் போகிறார்களா என்று தெரியவில்லை. முதலாவதாயிருந்தால் சின்னப் பத்திரிகைகளும் புதுப் பத்திரிகைகளும் நாசமடைய வேண்டியதுதான். பின்னதாயிருந்தால் நான் ஒரு யோசனை சொல்லுகிறேன். நாங்கள் பிரசுரிக்கிற விளம்பரங்களுக்கெல்லாம் சர்க்கார் பணத்தை வசூல் செய்து கொடுத்து விட்டுப் படிக்குப் பாதி வரியாக எடுத்துக் கொள்ளட்டும்!" என்றார். மகாநாடு குலுங்கச் சிரித்து மகிழ்ந்தது.

* * *

மகாநாட்டில் சர்ச்சைக்கு வந்த மற்றொரு முக்கியமான விஷயம், ஆபாசத்தையும் வகுப்புத் துவேஷத்தையும் பரப்பும் பத்திரிகைகளைப் பற்றியது. இத்தகைய பத்திரிகைகள் 'பத்திரிகை உலகத்துக்கே அவமானம் உண்டுபண்ணுகிறவை' என்பதை உண்மையான பத்திரிகையாளர் அனைவரும் உணர்ந்திருக்கிறார்கள்.

இதைக் குறித்து மேற்படி மகாநாட்டின் வரவேற்பு உரையிலிருந்து ஒரு சிறு பகுதியை இங்கே எடுத்துப் பிரசுரிக்க விரும்புகிறேன்:—

"தென்னாட்டு மக்களின் நல்லறிவிலும் மேலான பண்பாட்டிலும் நான் பூரண நம்பிக்கை கொண்டவன். ஆதலின் மஞ்சள் பத்திரிகைகள் பொது ஜனங்களிடம் பெறக்கூடிய செல்வாக்கைக் குறித்து நான் அதிகம் கவலைப்படவில்லை. துவேஷப் பிரசாரம் செய்த வசைமொழிப் பத்திரிகைகள் பல ஆரம்பித்துச் சில காலம் ஆர்ப்பாட்டம் செய்வதையும் பிறகு இருந்த இடம் தெரியாமல் மறைந்து போவதையும் பார்த்து வந்திருக்கிறோம். தென்னிந்தியாவிலுள்ள நம் ஜனங்கள் ஆபாசத்தையும் வசையையும் துவேஷப் பிரசாரத்தையும் விரும்புவது இல்லை. உண்மையையும் நன்னெறியையும் உயர்ந்த இலக்கியப் பண்பையுமே தென்னாட்டு ஜனங்கள் விரும்புகிறார்கள். அத்தகைய நல்ல அம்சங்களைக் கொண்ட பத்திரிகைகளையே நீடித்து ஆதரிக்கிறார்கள். ஆபாச வசைமொழிப் பத்திரிகைகளின் செல்வாக்கு நம் நாட்டில் அதிகமாக வளரவும் முடியாது; நீடித்திருக்கவும் முடியாது. இத்தகைய மாதிரிப் பத்திரிகைகள் அடிக்கடி தோன்றுவதாலும் சில காலம் நடப்பதாலும் பத்திரிகை உலகம் அபகீர்த்தி அடைகிறதே என்பதைப் பற்றித்தான் வருந்த வேண்டியிருக்கிறது."

* * *

ஆபாசத்தையும் வகுப்புத் துவேஷத்தையும் பரப்பும் பத்திரிகைகள் பத்திரிகை உலகத்துக்கு அவமானம் விளைப்பது மட்டுமில்லை. பாரத நாட்டின் பழ

மையான பண்பாட்டுக்கும் தர்மத்துக்கும் துரோகம் செய்கின்றன.

"யாதும் ஊரே! யாவரும் கேளிர்!" (எல்லாம் நம் ஊர்: யாவரும் நம் உறவினர்) என்னும் தர்மம் தோன்றிய தமிழ் நாட்டில் சிலர் வகுப்புத் துவேஷத்தைப் பரப்புகிறார்கள் என்றால், அது தெய்வத் தமிழகத்தின் துரதிர்ஷ்டம் என்றுதான் சொல்ல வேண்டும்.

சாதித் துவேஷத்தையும் வகுப்புத் துவேஷத்தையும் வளர்த்தல் மிகப் பொல்லாதது. அதனால் குறிப்பிட்ட சாதி அல்லது வகுப்புக்கு ஏற்படும் தீங்கைவிட சமுதாயத்துக்கு ஏற்படும் தீங்கு மிக அதிகம். துவேஷத்தை வளர்ப்பவர்கள் அடையும் நிலைமையோ அளவில்லாதது.

ஆகையால் சமுதாய நன்மையையும் தேச நன்மையையும் முன்னிட்டுச் சாதி—வகுப்புத் துவேஷங்களை வளர்க்கும் பத்திரிகைகளுக்கு இடங் கொடுக்கக்கூடாது.

இது சம்பந்தமாகச் சர்க்கார் எடுக்க வேண்டிய அவசியமான நடவடிக்கைகளுக்கு விசேஷ அதிகாரம் எதுவும் தேவையில்லை யென்றும் சாதாரண கிரிமினல் சட்டங்களைச் சரியானபடி உபயோகித்தால் போதும் என்றும் பத்திரிகையாளர் சம்மேளனம் தீர்மானம் செய்திருக்கிறது.

• • •

**ப**த்திரிகையாளர் மகாநாடு சம்பந்தமான இன்னும் இரண்டு விசேஷங்களைக் குறிப்பிட விரும்புகிறேன்.

சென்னையிலுள்ள பிரிட்டிஷ் பிரசார இலாகா ஸ்தாபனத்தின் தலைவர் மகாநாட்டுப் பிரதிநிதிகள் அனைவருக்கும் சிற்றுண்டி விருந்தளித்தார். செலவு அவருக்கு ஆயிரம் ரூபாய் இருக்கும். சென்னை நகரில் உள்ள பிரிட்டிஷ் பிரசார இலாகா ஸ்தாபனத்துக்கு வருஷம் ஒரு லட்சம் ரூபாய் செலவு ஆகிறதாக அறிகிறேன். இந்த மாதிரி பிரிட்டிஷ் செய்தி ஸ்தாபனங்கள் இந்தியாவின் முக்கிய நகரங்கள் எல்லாவற்றிலும் இருக்கின்றன. உலகமெல்லாம் இருக்கின்றன.

சென்னையில் பிரிட்டிஷ் விளம்பர இலாகாவுக்காகப் பிரிட்டிஷார் செலவு செய்யும் தொகை நமது மாகாண சர்க்கார்கள் தங்களுடைய காரியங்களை விளம்பரப் படுத்துவதற்குச் செலவு செய்வதில்லை.

இந்திய சுதந்திர சர்க்காரும் மாகாண ஜனநாயக சர்க்கார்களும் பிரிட்டிஷ் விளம்பர ஸ்தாபனத்தைப் பார்த்து ஒரு பாடம் படிக்க வேண்டியது அவசியம்.

பர்மாப் பிரதமர் தகின் நு டில்லிக்கு விஜயம் செய்ததின் நோக்கம் நிறைவேறி விட்டது.

—பத்திரிகைத் தலைப்பு.

இந்த ஒரு விஷயத்திலாவது தகின் நு ஜயம் அடைந்ததைப் பாராட்டுகிறோம்.

★

"ஸ்ரீ குமாரசாமி ராஜா பிரதம மந்திரியாக வந்ததில் உங்கள் அபிப்பிராயம் என்ன?"

—ஒரு கேள்வி.

"மகாராஜனும் வந்துவிட்டுப் போகட்டும்!" என்கிறார் ஒரு பெரியவர்.

**ப**த்திரிகையாளர் மகாநாட்டின் வெற்றிக்கு முக்கிய காரணமாயிருந்த காரியதரிசி ஸ்ரீ வி. கே. நரசிம்மன் ஒரு குதம்பக் கலை நிகழ்ச்சியை ஏற்படுத்தியிருந்தார். அதில் முக்கியமானது டாக்டர் டாகூர் அவர்களின் "பலி" என்னும் நாடகத்தைப் பத்திரிகையாளர் நடித்தது. நாடகத்தில் நடித்தவர்கள் சிறந்த நாடகத் திறமையுடனும் உணர்ச்சி பாவத்துடனும் நடித்தார்கள். கோவில் பூசாரியாக நடித்த ஸ்ரீ குருநாதன் (ஹிந்து) அவர்களையும், பூசாரியின் புதல்வனாக நடித்த ஸ்ரீ முத்துசாமி (குனோப்) அவர்களையும் முக்கியமாகக் குறிப்பிட வேண்டும். பூசாரியின் மகனுக்குத் தகப்பனுருடைய வார்த்தையைக் கேட்பதா, இடைப் பெண்ணின் காதலைப் பெரிதாகக் கருதுவதா, அல்லது தன் மனச் சாட்சி காட்டும் வழிப்படி நடப்பதா என்ற உள்ளப் போராட்டம் ஏற்படுகிறது. இந்த உள்ளப் போராட்டத்தை அற்புதமான உணர்ச்சி பாவத் திறமையோடு பூசாரியின் மகன் வெளியிட்டு நடித்தான். பூர்விக ஆசாரத்துக்காகப் புதல்வனைப் பலி கொடுத்த பூசாரியின் நடிப்பும் பிரமாதமாக இருந்தது.

• • •

**வ**ருகிற வருஷத்தில் தென்னாட்டுப் பத்திரிகைகள் எல்லாம் செழித்தோங்கி வளரட்டும்! தாய்நாட்டுக்கும் சமூகத்துக்கும் தூய்மையான தொண்டு புரிந்து புகழும் சிறப்பும் அடையட்டும்! பேனாவீரர்களின் பேனா முனை சத்தியப் போர் முனையில் போராடிப் பூரண வெற்றி அடையட்டும்!

# பாதாள லிங்கமும் ரமண ரிஷிகளும்

[வி. வி. திலக் சாஸ்திரி]

"திருவண்ணாமலை" நினைத்த மாத்திரத்திலே முக்தியை அளிக்க வல்லது என்று பெருமை பெற்ற தலம். இது வட ஆற்காடு ஜில்லாவிலே விழுப்புரம் காட்பாடி ரயில் பாதையில் உள்ளது. ஹிந்து மதத்தின் மீது பக்தி சிரத்தை கொண்ட பாரத மக்கள் போற்றும் புனிதமான திருக்கோயிலும் அருணாசலமென்னும் அண்ணாமலையும் இந்த ஸ்தலத்தில் இருக்கின்றன. ஞான மார்க்கத்தை நாடி மனதிற்கும் ஆத்மாவிற்கும் சாந்தி பெறவேண்டி நூற்றுக் கணக்கான மெய்யன்பர்கள் இந்தியாவிலிருந்து மட்டுமல்லாமல் ஏனைய பல வெளி நாடுகளிலிருந்தும் ஆர்வத்துடனே தேடிவரும் ஸ்ரீ ரமண மகரிஷிகளின் ஆசிரமமும் இங்கேதான் இருக்கிறது. சென்ற இருபத்தெட்டு வருஷமாக நேர்மையான முறையில் தேசத் தொண்டு ஆற்றி வரும் ஸ்ரீ அண்ணாமலைப் பிள்ளை (எம்.எல்.ஏ.) இந்த ஊரைச் சேர்ந்தவர். அண்ணாமலையாரின் ஆலயம், ரமண ரிஷியின் ஆஸ்ரமம், அண்ணாமலைப் பிள்ளையின் தேசபக்தி ஆகியவற்றால் சிறந்த திருவண்ணாமலைவாசிகளின் நீண்ட நாளைய விருப்பம் நிறைவேறும் நன்னாள் நம்மை நாடி வருகிறது. நானது மே மாதம் 14-ம் தேதி சனிக்கிழமை நமது மேன்மை தங்கிய கவர்னர் ஜெனரல் ராஜாஜி அவர்கள் திருவண்ணாமலைக்கு விஜயம் செய்கிறார்கள்.

"ஞானத் தபோதனரை வா வென்று அழைக்கும் மலை அண்ணாமலை!" எனத் திருவண்ணாமலையில் உள்ள மலையைப் பற்றிக் குகை நமச்சிவாயர் பாடியுள்ளார். நாட்டின் பல பாகங்களில் தோன்றிய மகான்கள் பலர் திருவண்ணாமலையின் அழைப்புக் கிணங்கி இங்கே வந்திருக்கிறார்கள். குகை நமச்சிவாயர், திருப்புகழ் பாடிய அருணகிரிநாதர், ஈசான்ய மடத்து சுவாமிகள், சேஷாத்ரி சுவாமிகள் முதலியோர் அண்ணாமலையில் வசித்துப் பிரசித்தி படைத்தவர்கள். கடைசியாக, மகரிஷி ரமணர் இவ்விடம் விளங்கி வருகிறார்.

* * *

மதுரையை அடுத்த திருச்சுழி என்னும் ஊரில் வக்கீல் சுந்தரய்யர் - அழகம்மாள் இவர்களுக்கு இரண்டாவது புதல்வராக 30—12—1879ல் தோன்றிய வெங்கட ரமணன் தம் இளம் வயதிலேயே தந்தையை இழந்தார். பள்ளிக்கூடப் படிப்பில் அவருடைய கவனம் செல்லவில்லை. அடிக்கடி ஆலயம் செல்வார். நாயன்மார்கள் அறுபத்து மூவரிடம் தம்மையும் அவர்கள் குழாத்துடன் சேர்த்துக் கொள்ளும்படி கண்ணீர் சொரிந்து வேண்டிக் கொள்வார்.

ஒரு நாள் அந்த இளைஞருக்கு மரண பயம் தோன்றிற்று. ஆத்ம விசாரணையில் அமர்ந்தார். சாவு எது? வாழ்வு எது? உடல் எரிக்கப் படுகிறது. ஆனால் ஆத்மாவோ அழிவற்றது. அந்த ஆத்மாவே நான். அப்படியிருக்கும்போது மரணம் எது? கையிலே புத்தகம். எதிரில் விளக்கு. மனோ தியானத்தில் ஆழ்ந்திருந்தது. மெய் மறந்த ஞான நிலை. அதைக் கண்ணுற்ற இவர் அண்ணனுக்கு ஆத்திரம் உண்டாயிற்று. மிகவும் கண்டித்தார். அண்ணனின் கண்டிப்பை ஆண்டவனின் ஆணையாகக் கொண்டார் பால தபோதனர். அண்ணாமலையின் அழைப்பைப் பெற்றார். பள்ளிச் சம்பளத்திற்கு அண்ணன் அளித்த பணத்தில் ஒரு பகுதியை எடுத்துக் கொண்டார். மீதியை ஒரு கடிதத்துடன் வீட்டிலே வைத்துவிட்டு 29-8-1896ல் மதுரையை விட்டுப் புறப்பட்டார். ரயில் வண்டியிலே ஒரு முகம்மதியப் பெரியோரால் அண்ணாமலையைப் பற்றிய சில வரலாறுகளை அறிந்தார். அரையணி நெல்லூர் சென்று காதுக் கடுக்கன்களை நாலு ரூபாய்க்கு அடகு வைத்துப் பணம் பெற்று அண்ணாமலைக்கு ஐம்பத்திரண்டு ஆண்டுகளுக்கு முன் வந்து சேர்ந்தார்.

அண்ணாமலைக்கு விஜயம் செய்ததும் முதன் முதலாக ஆலயத்தை அடைந்தார். தாபதக் கோலம் பூண்டார். கௌபீனம் தரித்து எஞ்சி இருந்த பணத்தையும் வீசி எறிந்தார். பால் மணம் மாறா இளம்பிராயத்தில் முற்றுந் துறந்த முனிவரானார்.

அந்தக் காலத்தில் ரமணர் தவமியற்றிய காட்சியைக் கண்ணால் கண்ட பல அன்பர்கள் இன்றும் இருந்து வருகின்றனர். உடல் நிலை, பசி, தாகம், — ஒன்றையும் அவர் நினைக்கவில்லை. அமர்ந்திருந்த இடத்திலிருந்து எழுந்திருக்கக்கூட இல்லை. இவர் தொடையிலே கறையான் பிடித்து மண் இட்டிருந்தது. பூரான் போன்ற விஷ ஜீவன்கள் கடித்துத் துன்புறுத்தின. இதையெல்லாம் பொருட்படுத்தாது தவமியற்றினார்.



ரமண ரிஷி தவம் செய்த பாதாளலிங்கக் குகை இந்த ஆயிரக்கால் மண்டபத்துக்குள்ளே இருக்கிறது.

---

**ம**கரிஷி ரமணர் கடுந்தவம் இயற்றிய இடங்கள் பல. அவற்றில் பாதாளலிங்கம், கம்பத்திளையனார் கோவில், குருமூர்த்தம், பவளக் குன்று, விருபாக்ஷக் குகை, மாமரத்துக் குகை முதலியவை முக்கியமானவை.

பாதாளலிங்கத்தில் ரமணர் தவம் இயற்றிய சமயத்திலேதான் அவருக்கு அதிக இடைஞ்சல்கள் ஏற்பட்டன. ஒருபுறம் விஷப் பிராணிகளின் தொல்லை. மற்றோர் புறம் காலிகளின் உபத்திரவம். கல்லை வீசி எறிந்தனர்; பீடித்துண்டை எறிந்தனர். இன்னும் எவ்வளவோ இன்னல்கள். அந்த இன்னல்களைச் சிறிதும் பொருட்படுத்தாது தவத்தையே பெரிதாகக் கொண்டிருந்த ரமணர் விரைவிலேயே ஆத்மீக வெற்றி பெற்றார்.

மகரிஷி ரமணரின் உபதேசத்தில் முக்கியமானது: ''ஆன்மாவின் இயல்பை அறிவதற்கு 'நான் யார்?' என்பதை முதலில் ஆராய வேண்டும்'' என்பதே. எல்லா நினைவுகளுக்கும் ஆதியாகிய நான் என்பது மனத்தின் பிறப்பிடமாகிய இருதயத்தில் அடங்கிவிடுகிறது. ஆசை, கோபம், அறியாமை, பயம் இவற்றை அழிக்க விரும்புகிறவன் முதலில் 'நான் யார்?' எனும் விசாரணையில் மனத்தை கலப்பிக்க வேண்டும். ''மனோநாசம்தான் முக்தி'' என்று மகரிஷி ரமணர் அருளி வருகிறார்.

**பா**தாளலிங்கம் எனும் சிறு குகை திருவண்ணாமலை அருணாசலேசுவரர் ஆலயத்தின் ஆயிரக்கால் மண்டபத்துள் தென் மேல்புறத்தில் இருக்கின்றது. மகரிஷி ரமணரின் பரம பக்தர்களுள் ஒருவராகிய **ஸ்ரீமதி தாலியார்கான் அம்மையார்** மகரிஷி ரமணர் முதலில் தவமியற்றிய இடமாகிய பாதாள லிங்கக் குகையைப் புதுப்பிக்கும் திருப்பணியில் ஈடுபட்டார். நமது மாஜி பிரதமரும் ரமண பக்தருமான ஸ்ரீ ஓமந்தூர் ராமசாமி ரெட்டியார் பாதாள லிங்கக் கோயிலைப் புதுப்பிக்கும் திருப்பணிக்கு அஸ்திவாரக் கல்லை நாட்டினார். அந்தத் திருப்பணி பூர்த்தியான வைபவத்தைக் கொண்டாடுவதற்கு வரும் மே மீ 14உ சனிக்கிழமையன்று நமது சுதந்திர இந்தியாவின் கவர்னர் ஜெனரல் மேன்மை தங்கிய சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார் அவர்கள் திருவண்ணாமலைக்கு விஜயம் செய்கின்றார்கள்.

ராஜாஜி மீது வட ஆர்க்காடு ஜில்லா வாசிகளுக்குத் தனிப்பட்ட அன்பு உண்டு. ராஜாஜியின் தலைமையில் நடைபெறப் போகும் பாதாளலிங்கப் புனரமைப்பு விழாவைக் காண இந்த ஜில்லா வாசிகள் ஆவலாயிருக்கிறார்கள் என்பதைச் சொல்லவும் வேண்டுமோ?

**திருவண்ணாமலை** **26—4—49**




## பதினாலாம் அத்தியாயம்

# ரஜனிபூர் ராஜகுமாரி

சூரியா தன் திகைப்பை நீக்கிக் கொண்டு, "மாப்பிள்ளை, இது என்ன கோபம்? இங்கிலாந்தில் இருந்தபோது இங்கிலீஷ் சினிமாக்கள் அதிகமாகப் பார்த்தீர்களா, என்ன? ஒரு காரணமுமில்லாமல் துப்பாக்கியால் சுடுவேன் என்கிறீர்களே? தோட்டாக்களை வீணாக்க வேண்டாம். பின்னால் ஏதாவது அவசியமான காரியத்துக்கு உபயோகமாயிருக்கும்!" என்றான்.

"எப்போதும் நீ அரட்டைக்கல்லித்தனமாகப் பேசுகிறதில் கெட்டிக்காரன் என்று எனக்குத் தெரியும். உன் அதிகப் பிரசங்கத்தை என்னிடம் காட்டவேண்டாம். ஏன் உன்னைச் சுட்டுக் கொல்லக்கூடாது என்று எனக்குத் தெரியவில்லை. சீதாவை அழைத்துக் கொண்டு ஓடினவன் அல்லவா நீ? இப்போது வஸந்தியையும் 'கிட்நாப்' செய்ய வந்துவிட்டாய்! உன்னைப் போலீஸில் பிடித்துக் கொடுத்துவிட்டு மறு காரியம் பார்க்கப் போகிறேன். தப்பி ஓடப் பார்க்காதே! ஓடினால் கட்டாயம் சுட்டு விடுவேன்!" என்றான் ராகவன்.

ராகவனுக்குப் பின்புறத்தில் நின்று கொண்டிருந்த காமாட்சி அம்மாள், "அப்பா, ராகவா! இது என்ன ரகளை வந்ததும் வராததுமாய்? அப்படியொன்றும் சூரியா செய்யத்தகாத காரியத்தைச் செய்யக் கூடியவன் அல்ல. நான்தான் வஸந்தியை அவள் அம்மாவிடம் அழைத்துப் போகும்படி சூரியாவிடம் சொன்னேன். வெகு நாளாக அந்தக் குழந்தை அப்பா, அம்மா இரண்டு பேரையும் பார்க்காமல் ஏங்கிக் கிடந்தது!" என்றாள்.

வஸந்தி, "சூரியா மாமா! நான் அப்பாவைக் கெட்டியாகப் பிடித்துக் கொள்கிறேன். நீங்கள் சட்டென்று ஓடிப் போய்விடுங்கள்!" என்றாள்.

குழந்தையின் மழலையைக் கேட்ட ராகவனுடைய மனம் சாந்தமும் சிறிது வெட்கமும் அடைந்தது.

"மிஸ்டர் சூரியா! பொம்மனாட்டிகள் எல்லாருமே உன்னுடைய கட்சியில்தான் இருப்பார்கள் என்று எனக்குத் தெரியும். சரி! இந்தத் தடவை போனால் போகிறதென்று விட்டு விடுகிறேன். விடு சவாரி! நிற்காதே! கெட் அவுட்!" என்றான் ராகவன்.

"ஸார்! நான் போகத்தான் போகிறேன். ஆனால் போவதற்கு முன்னால் உங்கள் மனதில் உள்ள ஒரு தப்பெண்

ணத்தை நிவர்த்திக்க விரும்புகிறேன். உங்கள் மனைவி சீதாவை நான் அழைத்துக்கொண்டு ஓடிப்போனதாகச் சற்று முன்பு சொன்னீர்கள். நிஜமாகவே நீங்கள் அவ்விதம் நம்புகிறீர்களா என்று தெரியவில்லை. நம்பினால் அதைக் காட்டிலும் தவறு வேறொன்றுமில்லை. ரஜனிபூர் ராஜாவின் ஆட்கள் சீதாவைக் கைப்பற்றிக் கொண்டு போனார்கள். அதைத் தடுத்து நிறுத்திச் சீதாவைக் காப்பாற்றிக்கொண்டு வருவதற்காகவே நான் அவர்களைப் பின் தொடர்ந்து சென்றேன். அப்போதுதான் போலீஸார் என்னைப் பிடித்துக் கொண்டார்கள். சத்தியமாகச் சொல்கிறேன்!'' என்று சொன்னான் சூரியா.

"ஆமாண்டா, அப்பா, ராகவா! இதையெல்லாம் சூரியா என்னிடமும் சொன்னான். அவன் சொன்னதெல்லாம் எனக்கு நம்பிக்கையாயிருந்தது. சீதாவும் அதையேதான் சொன்னாள்!'' என்றாள் காமாட்சி அம்மாள்.

"அம்மா பட்ட கஷ்டத்தை யெல்லாம் கேட்டால் அதிசயமாகவும் பயங்கரமாகவும் இருக்கு, அப்பா! அரபிக் கதைகளிலே வருகிறது போல் இருக்கு!'' என்றாள் வஸந்தி.

ராகவன் தன் கைத் துப்பாக்கியைச் சட்டைப் பையில் போட்டுக் கொண்டு, "அப்படியானால் அதையெல்லாம் எனக்கும் விவரமாகச் சொல்லிவிட்டுப் போ! சூரியா! ஊருக்குப் போக அவசரம் ஒன்றுமில்லையே?'' என்றான்.

"அப்படியே ஆகட்டும், மாப்பிள்ளை ஸார்! எனக்கு அவசரம் ஒன்றும் இல்லை!'' என்றான் சூரியா.

• • •

சூரியா ரஜனிபூர் ராஜாவின் ஆட்களைப் பற்றிக் குறிப்பிட்டவுடனேயே ராகவனுடைய மனதில் அதைப் பற்றிச் சூரியாவிடம் பூரா விவரமும் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆவல் உண்டாகிவிட்டது. ஆகையால் ஸ்நானம் சாப்பாடு எல்லாம் முடிந்ததும் சூரியாவை அழைத்துக் கொண்டு தன்னுடைய பழைய மாடி அறைக்குப் போய்ச் சேர்ந்தான்.

"சூரியா! கப்பலில் வரும்போது நான் ஒரு பயங்கரமான சொப்பனம் கண்டேன். குழந்தை வஸந்தி காணாமற் போய்விட்டது போலவும் அவளைத் தேடிக் கொண்டு நான் பூமியிலும் வானத்திலும் நீரிலும் நெருப்பிலும் புகையிலும் பனியிலும் ஓடி ஓடி அலைந்ததாகவும் கண்டேன். குழந்தையின் குரல் மட்டும் 'அப்பா! அப்பா!' என்று பரிதாபமாகக் கேட்டுக் கொண்டிருந்தது. ஆனால் அவள் இருக்கும் இடத்தை என்னால் கண்டுபிடிக்க முடியவில்லை. கனவு கலைந்து எழுந்ததும் 'இனி ஒருநாளும் வஸந்தியை விட்டுப் பிரிவதில்லை!' என்று சபதம் செய்து கொண்டேன். ஆகையினால் தான் நீ வஸந்தியை அழைத்துப் போக வந்திருக்கிறாய் என்று கேள்விப்பட்டதும் எனக்கு அவ்வளவு கோபம் வந்தது! அதை நீ பொருட்படுத்த வேண்டாம்!'' என்றான் ராகவன்.

"மாப்பிள்ளை, ஸார்! கனவு காண்கிற விஷயத்தில் தாங்களும் தங்களுடைய மனைவியும் போட்டி போடுவீர்கள் போலிருக்கிறது. நாம் ஆக்ராவுக்குப் போயிருந்தபோது அத்தங்காள் கனவு கண்டது பற்றிச் சொன்னது ஞாபகம் இருக்கிறதா? ஆனால் அத்தங்காளின் வாழ்க்கையில் அந்த பயங்கரக் கனவைக் காட்டிலும் பயங்கரமான பல சம்பவங்கள் உண்மையாகவே நிகழ்ந்து விட்டன!'' என்று சொன்னான் சூரியா.

"அந்தச் சம்பவங்களைப் பற்றித் தெரிந்து கொள்வதற்குத்தான் உன்னை இருக்கும்படி சொன்னேன். சூரியா! நினைத்துப் பார்த்தால் வேடிக்கையாகத் தோன்றவில்லையா? சீதாவைப் பற்றி அவளுடைய கணவனாகிய எனக்குத் தெரிந்திருப்பதைக் காட்டிலும் உனக்கு அதிகமாகத் தெரிந்திருப்பது ஆச்சரியம் அல்லவா?'' என்று ராகவன் குத்தலாகக் கேட்டான்.

"ஆச்சரியமான விஷயந்தான்; இல்லை என்று சொல்லவில்லை. சந்தர்ப்பங்கள் அப்படி ஏற்பட்டு விட்டன. மேலும், நீங்கள் அநாவசியமாக என்னவெல்லாமோ சந்தேகப்பட்டுக் கொண்டு அத்தங்காளைப் பற்றிக் கவனியாமல் இருந்துவிட்டீர்கள்......''

"என்னுடைய சந்தேகங்கள் அவசியமா அநாவசியமா என்பதைப் பற்றி இப்போது சர்ச்சை வேண்டியதில்லை. ரஜனிபூர் ராஜாவின் ஆட்கள் உன் அத்தங்காளைப் பிடித்துக்

கொண்டு போனார்கள் என்று ஒரு கதை சொன்னாயல்லவா?......"

"அது கதை அல்ல, மிஸ்டர் ராகவன்! சத்தியமாக நடந்த காரியம்."

"அப்படியே இருக்கட்டும். ரஜனிபூர் ஆட்கள் சீதாவைப் பிடித்துக்கொண்டு போனது எதற்காக? பிடித்துக் கொண்டு போய் என்ன செய்தார்கள்? நீ சொல்வதை மட்டும் உண்மை என்று நிரூபித்துவிடும் பட்சத்தில் அந்த ரஜனிபூர் சமஸ்தானத்தையே ஒழித் துக் கட்டிவிட்டு மறு காரியம் பார்ப் பேன்!" என்றான் ராகவன்.

"என்னால் ஒன்றையும் நிரூபிக்க முடியாது, மாப்பிள்ளை! எப் பொழுதோ யாரோ செய்த காரியத்தை நான் எப்படிச் சாட்சி விட்டு நிரூபிக்க முடியும்? நான் சொல்வதை நீங்கள் நம்பினால்தான் உண்டு."

"அப்படியானால் நம்பிக்கை உண் டாகும்படியான உன்னுடைய கதை யைச் சொல், பார்க்கலாம்."

"மறுபடியும் 'கதை' என்றே கூறுகிறீர்கள். நான் என்ன சொல்லி என்ன பிரயோஜனம்?"

"நமக்குள் வீண் விவகாரம் வேண் டாம்! முதலில், ரஜனிபூர் ராஜாவின் ஆட்கள் எதற்காகச் சீதாவைப் பிடித் துக் கொண்டு போனார்கள் என்று சொல். ஒருவேளை காணமற் போன ரஜனிபூர் ராஜகுமாரி என்பதாகச் சீதாவை நினைத்துக் கொண்டார் களோ?" என்று ராகவன் கேலியாகக் கேட்டான்.

"ஆமாம்; உங்களுக்குத்தான் தெரிந் திருக்கிறதே!" என்றான் சூரியா.

சூரியாவினுடைய பதில் ராகவ னுடைய ஆவலை அதிகமாக்கிற்று.

"நான் ஏதோ குருட்டாம் போக் காய்ச் சொன்னேன். நீ அதுதான் உண்மை என்கிறாய். நான் ஆச்சரியக் கடலில் மூழ்கிப் போகவேண்டியது தான். ஆயினும் பாக்கி விவரங் களையும் தெரிந்து கொள்வதற்காக அடியோடு ஆச்சரியக்கடலில் மூழ்கி விடாமல் மேலே தலையை மட்டும் நீட்டிக் கொண்டிருக்கிறேன்!" என்று சொன்னான் ராகவன்.

"இன்னும் உங்களுடைய கேலிப் பேச்சுப் போகவில்லை. மாப்பிள்ளை, ஸார்! நீங்கள் எப்போதாவது ஒரு விஷயத்தைக் கவனித்ததுண்டா? தாரிணி தேவியும் சீதா அத்தங்காளும் அசப்பிலே பார்க்கும்போது உருவ ஒற்றுமை கொண்டவர்களாக உங்க ளுக்கு எப்போதாவது தோன்றிய துண்டா?" என்று சூரியா கேட்டான்.

ராகவனுக்குத் தூக்கிவாரிப் போட் டது. மனதில் பற்பல ஐயங்களும் ஊகங்களும் அலைமோதிக் கொண்டு எழுந்தன. ஆயினும் வெளிப்படை யான அமைதியுடன், "இல்லை, சூரியா! பெண்மணிகளின் உருவங்களையோ அவர்களுடைய உருவ ஒற்றுமை வேற் றுமைகளையோ நான் அவ்வளவாகக் கவனிப்பதில்லை. நீ சொல்வது போல் தாரிணியும் சீதாவும் ஓரளவு உருவ ஒற்றுமை உள்ளவர்கள் என்றே வைத்துக் கொள்ளலாம். அதனால் என்ன?" என்று கேட்டான்.

"வேறொன்றுமில்லை. ரஜனிபூர் ஆட்கள் தாரிணி தேவி என்று நினைத் துக்கொண்டு சீதாவைக் கைப்பற்றிக் கொண்டு போனார்கள்!......"

"ஆகா! அப்படியானால் தாரிணி...?" என்று ராகவன் ஆரம்பித்து, ஒரு பெரிய கேள்விக் குறியுடன் வாக்கி யத்தை நடுவில் நிறுத்தினான்.

"ஆமாம்; ரஜனிபூர் ராஜகுமாரி உண்மையில் தாரிணி தேவிதான்!" என்றான் சூரியா.

ராகவன் சற்று நேரம் வியப்பினால் திகைத்திருந்தான். பிறகு, "உனக்கு எப்படித் தெரிந்தது, சூரியா? தாரிணி யுடன் எத்தனையோ காலம் நான் பழகியவன். அவளும் என்னிடம் சொல்லவில்லை; நானும் சந்தேகிக்க வில்லையே?" என்றான்.

"தாரிணி என்னிடமும் சொல்ல வில்லை; நானும் சந்தேகிக்க வில்லை. சீதா அத்தங்காள் மூலமாகத்தான் எனக்கு முதலில் தெரிந்தது."

"தாரிணி என்று எண்ணிக்கொண்டு சீதாவைப் பிடித்துப் போனார்கள் என்று எப்படி அனுமானித்தாய்?"

"சீதாவை அவர்கள் கைப்பற்றிய முதல் நாள் நானும் தாரிணி தேவியும் டெல்லி வீதிக்குப் பின்னால் உள்ள காந்தி மைதானத்தில் உட்கார்ந்து பேசிக்கொண்டிருந்தோம்......"

அசூயை நிறைந்த குரலில் ராகவன் "என்ன பேசிக்கொண் டிருந்தீர்கள்?" என்று கேட்டான்.

"புரட்சி இயக்கத்தை எப்படித் தொடர்ந்து நடத்துவது, இந்தியாவின் சுதந்திரத்தை எப்படிக் கைப்பற்றுவது, வெள்ளைக்காரர்களை நாட்டைவிட்டு எப்படி வெளியேற்றுவது,— என்பது போன்ற விஷயங்களைப் பற்றிப் பேசிக்கொண் டிருந்தோம். தாரிணி அவ்விடமிருந்து போன பிறகு மூன்று ஆசாமிகள் என்னிடம் வந்தார்கள். அவர்களுடைய தோற்றத்தைப் பார்த்தவுடனேயே சுதேச சமஸ்தானத்து ஆட்கள் என்று தெரிந்து போய் விட்டது. தாரிணியைக் கைப்பற்றுவதற்கு நான் உதவி செய்தால் லட்சம் ரூபாய் கொடுப்பதாக அவர்கள் என்னிடம் சொன்னார்கள். அவர்களுடைய நோக்கம் என்னவென்பதை அப்போது நான் அறியவில்லை. சமஸ்தான ராஜாக்களின் வழக்கத்தையொட்டித் துர்நோக்கங் கொண்டு தாரிணியைக் கொண்டுபோக எண்ணுகிறார்கள் என்று எண்ணினேன். அவர்களை நன்றாகத் திட்டி அனுப்பினேன். மறு நாள் அதே காந்தி மைதானத்தில் ஏறக்குறைய அதே நேரத்தில் அதே இடத்தில் நானும் சீதா அத்தங்காளும் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தோம்......"

"ஆகா! அப்படிச் சொல்லு! உத்தமியாகிய அத்தங்கா சீதா யாருக்கும் தெரியாமல் வீட்டை விட்டுக் கிளம்பிக் காந்தி மைதானத்திற்கு வந்தாள் அல்லவா? எதற்காக?"

"மாப்பிள்ளை! நீங்கள் கோபித்துக் கொள்வதில்லை யென்றால் உண்மையைச் சொல்லி விடுகிறேன்."

"நான் கோபித்துக் கொள்வதானால் பொய் சொல்லுவாயாக்கும்!"

"சரி! எப்படியானாலும் நிஜத்தைச் சொல்லி விடுகிறேன். ராகவன்! சற்று முன்னால் நீங்கள் என்னைப் போலீஸாரிடம் பிடித்துக் கொடுத்து விடுவதாகச் சொன்னீர்கள். அப்படிச் செய்திருப்பின் ஒன்றும் மோசம் முழுகியிராது. ஆனால் முன்னொரு தடவை என்னைப் போலீஸில் பிடித்துக் கொடுப்பதற்கு எல்லா ஏற்பாடுகளும் செய்திருந்தீர்கள். தங்கள் வீட்டைச் சுற்றி இரகசியப் போலீஸ் சூழ்ந்திருக்க ஏற்பாடு செய்திருந்தீர்கள். அந்தச் சமயம் நான் கைதியாகியிருந்தால் புரட்சி இயக்கத்துக்குப் பெருந் தீங்கு நேர்ந்திருக்கும். அவ்விதம் நேராமல் தங்கள் மனைவி சீதாதான் காப்பாற்றினாள். உங்கள் வீட்டுக்கு நான் வரவேண்டாம் என்று எனக்கு எச்சரிக்கை செய்வதற்காகக் காந்தி மைதானத்துக்கு வந்தாள்......"

சீதா தன்னைத் தேடி வந்தது பற்றிய முழு உண்மையையும் சூரியா சொல்லவில்லை; பாதிதான் சொன்னான். அதுவே ராகவனுடைய மனதில் கொதிப்பை உண்டாக்கப் போதுமானதாயிருந்தது. 'ஆகா! அந்தச் சண்டாளி அப்படியா செய்தாள்? இந்தக் காலிப் பயலைக் காப்பாற்றிக் கொடுப்பதில் அவளுக்கு ஏன் அத்தகைய சிரத்தை ஏற்பட்டது?' என்று மனதிற்குள் எண்ணிப் பொருமினான்.

வெளிப்படையாக "சூரியா! ஒரு பெண்பிள்ளையின் பேச்சை நீ இவ்வளவு தூரம் நம்பக்கூடியவன் என்று நான் எண்ணவில்லை. நான் ஏதோ தமாஷாகப் பேசியதை உண்மை என்று நினைத்துக் கொண்டு வந்து உன்னிடம் ஏதோ உளறியிருக்கிறாள்!" என்றான்.

"இருக்கலாம், மிஸ்டர் ராகவன்! தமாஷாகக் கூடக் கெடுதலான காரியங்களைப் பற்றிப் பேசக்கூடாதென்று இதிலிருந்து ஏற்படுகிறது. உங்களுடைய தமாஷ் பேச்சிலிருந்து எவ்வளவு விபரீதங்கள் நேர்ந்து விட்டன, பாருங்கள்!" என்றான் சூரியா.

"அந்த விபரீதங்களைப் பற்றிய விவரத்தை இன்னும் நீ எனக்குச் சொல்லுகிற வழியாக இல்லை. அதைத் தெரிந்து கொள்வதற்கோ எனக்கு ஒரே பரபரப்பா யிருக்கிறது!" என்றான் ராகவன்.

"நீங்கள் சொல்லும்படி விட்டால் தானே? குறுக்கே ஏதாவது கேட்டுக் கொண்டே யிருந்தால் எப்படிச் சொல்வது? சற்று மௌனமாகக் கேட்டால் எல்லாவற்றையும் சொல்லி விடுகிறேன்!" என்றான் சூரியா.

"சரி! இதோ மௌனம்!" என்று சொல்லி ராகவன் கேலியாகத் தன் வாயைப் பொத்திக் கொண்டான்.

பிறகு சூரியா, சீதாவைத் தாரிணி என்று நினைத்துக் கொண்டு ரஜனிபூர் சமஸ்தானத்து ஆட்கள் கைப்பற்றிக் கொண்டு போனது முதல் சீதா கல்கத்தாவுக்கு வந்து சேர்ந்து கைதி செய்யப்பட்டது வரையில் எல்லா வற்றையும் சுருக்கமாகக் கூறினான்.

"ரஜனிபூர் ஆட்கள் செய்த தவறையே கல்கத்தா போலீஸ்காரர்களும் செய்தார்கள். சீதா அத்தங்காளைத் தாரிணி தேவி என்று கருதிப் பாதுகாப்புச் சட்டத்தின் கீழ்க் கைதி செய்து சிறைக்கு அனுப்பினார்கள்!" என்று சூரியா சொல்லி முடித்தான்.

## பதினோராம் அத்தியாயம்

# கங்காபாயின் கதை

சூரியா சொல்லிய கடைசி விஷயம் ராகவனுடைய எண்ணத்தை வேறு வழியில் செலுத்தியது. பலவித சந்தேகங்கள் அவன் மனதில் உதித்தன. "ரஜனிபூர்ப் பைத்தியம்" என்று சொல்லப் பட்ட ஸ்திரீ தன்னிடம் வந்து சீதாவைப் பற்றி எச்சரித்தது நினைவுக்கு வந்தது. இந்த விஷயத்தில் இன்னும் ஏதோ மர்மம் இருக்கிறதென்றும் அதைக் கண்டு பிடிக்க வேண்டும் என்றும் எண்ணினான். ஒரு வேளை சீதாதான் உண்மையில் ரஜனிபூர் இளவரசியோ, என்னமோ? இந்தப் போக்கிரி சூரியாவும் அவனுடைய காதலி தாரிணியும் சேர்ந்து ஏதோ சூழ்ச்சி செய்து கொண்டிருக்கிறார்களோ, என்னமோ? இல்லாவிட்டால் சீதா தவறுகச் சிறைக்கு அனுப்பப்பட்டிருந்தும் இவர்கள் ஏன் அவள் தாரிணி இல்லை என்று சொல்லி அவளை விடுவிக்க முயற்சி எதுவும் செய்யவில்லை?

"சூரியா! தாரிணி தேவிதான் காணாமற்போன ரஜனிபூர் இளவரசி என்று எதனால் அவ்வளவு நிச்சயமாகச் சொல்கிறாய்? ஏன் அந்த ராஜகுமாரி சீதாவாக இருக்கக் கூடாது?" என்றான் ராகவன்.

சூரியாவின் முகத்தில் புன்னகை மலர்ந்தது. "சீதா ரஜனிபூர் ராஜகுமாரி என்று ஏற்பட்டால் எவ்வளவோ நலமாயிருக்கும், மிஸ்டர் ராகவன்! ஏனெனில், தாரிணிக்கு அந்த 'ராஜகுமாரி' என்கிற பட்டமே வேப்பங்காயாக இருக்கிறது. எனக்கும் அப்படித்தான். ஆனால் சீதா அத்தங்கா ரொம்பவும் 'ரொமாண்டிக்' இயல்பு உள்ளவள். தான் ராஜகுமாரி என்று ஏற்பட்டால் அத்தங்காளுக்கு எவ்வளவோ சந்தோஷமாயிருக்கும். தங்களுக்கும் அது திருப்தியளிக்கும் என்று தெரிகிறது. அத்தங்கா பேரில் தங்களுக்குள்ள கோபத்தையெல்லாம் மறந்து சந்தோஷம் அடைவீர்கள். ஆனால் அப்படி இல்லையே, என்ன செய்வது? யாருக்கு ஒரு பொருள் பிரியமாயிருக்கிறதோ அவருக்கு அப்பொருளைக் கடவுள் அளிப்பதில்லை. வேண்டாதவர்களுக்குப் பார்த்துக் கொடுக்கிறார்!" என்று சூரியா சொன்னான்.

"உன்னுடைய வேதாந்தம் அப்புறம் இருக்கட்டும். சீதா டில்லியை விட்டுப் போன சில நாளைக்கெல்லாம் எனக்கு ஓர் அனுபவம் ஏற்பட்டது. அதைச் சொல்கிறேன், கேட்கிறாயா?"

"பேஷாகக் கேட்கிறேன்; சொல்லுங்கள்!" என்றான் சூரியா.

அதன் பேரில் ராகவன், திடீரென்று ஒரு நாள் கையில் கத்தியுடன் தோன்றிச் சீதாவைச் சரியாக நடத்த வேண்டும் என்று தனக்கு எச்சரிக்கை செய்து விட்டுப் போன ஸ்திரீயைப் பற்றிச் சூரியாவிடம் சொன்னான்.

"அந்த ஸ்திரீ யார்? சீதாவைப் பற்றி அந்த வடநாட்டு ஸ்திரீக்கு ஏன் அவ்வளவு சிரத்தை உண்டாக வேண்டும்? உன்னால் சொல்ல முடியுமா?" என்று ராகவன் கேட்டான்.

"சொல்ல முடியும்!" என்று சூரியா சொன்ன பதில் ராகவனைத் தூக்கி வாரிப் போட்டது.

"அந்த ஸ்திரீயின் முதல் பெயர் ரமாமணி பாய்; இப்போது அப்பெயர் ரஸியா பேகம். சீதா அத்தங்காள் மீது அவளுக்கு வாஞ்சை ஏற்படக் காரணம் உண்டு. அது பெரிய கதை, மாப்பிள்ளை ஸார்! கிட்டத்தட்ட

மூப்பது வருஷத்துக்கு முன்னால் ஆரம்பிக்கும் கதை. எனக்கும் வெகுகாலம் வரை தெரியாமல்தானிருந்தது. சில மாதத்துக்கு முன்புதான் தெரிந்துகொண்டேன். அதுவும் ரஸியாபேகம் சொல்லித்தான் தெரிந்தது. அந்தத் துர்ப்பாக்கியவதி பெரும்பாலும் வெறிகொண்டு திரிகிறவள். அபூர்வமாகச் சில சமயம் அவளுடைய மனம் தெளிகிறது. அப்படிப்பட்ட சமயத்தில் தற்செயலாய் அவளைப் பார்த்தபோது கேட்டுத் தெரிந்து கொண்டேன். சீதா அத்தங்காளிடம் கூட அதைப்பற்றிச் சொல்லவில்லை. தங்களுக்குத் தெரிந்திருக்கவேண்டியது அவசியமாதலால் சொல்லுகிறேன்!"—இந்தப் பூர்வ பீடிகையுடன் ஆரம்பித்து ரஸியா பேகத்தைப் பற்றிய அபூர்வ வரலாற்றைச் சூரியா கூறினான்.

• • •

மூப்பது வருஷத்துக்கு முன்னால் ரஜனிபூர் சமஸ்தானத்தின் சிம்மாசனத்தில் வீற்றிருந்த மகாராஜா மற்றும் பல சமஸ்தான மன்னர்களைப் போலவே சிற்றின்பப் பிரியனாயிருந்தான். இராஜ்ய காரியங்களைத் திவானும் பிரிட்டிஷ் ரிஸிடெண்டும் பார்க்கும்படி விட்டு விட்டுத் தான் லீலா விநோதங்களில் காலங் கழித்து வந்தான். அந்த லீலா விநோதங்களை ஏற்படுத்திக் கொடுப்பதற்குப் பல துர் மந்திரிகள் இருந்தார்கள். அவர்களில் முக்கியமானவன் மதோங்கர்.

ஒரு சமயம் ரஜனிபூர் மகாராஜாவின் சபைக்கு மகாராஷ்டிர தேசத்திலிருந்து பாடகி ஒருத்தி வந்து பாடினாள். அவள் பெயர் கங்காபாய். மகாராஜாவுக்கு அவளுடைய பாட்டும் பிடித்திருந்தது; அவளையும் பிடித்திருந்தது. பாடகியுடன் அவளுக்குத் துணையாக அவள் தமக்கையும் வந்திருந்தாள். தமக்கையின் பெயர் ரமாமணி. அவள் நல்ல தைரியசாலி. உலக விவகாரங்களில் தனக்கு மிஞ்சியவள் கிடையாது என்று அவளுக்கு எண்ணம்.

மகாராஜாவின் முன்னிலையில் மூன்று நாள் இன்னிசைக் கச்சேரி நடந்த பிறகு மதோங்கர் என்பவன் அந்தப் பெண்கள் தங்கியிருந்த ஜாகைக்கு வந்தான். பாடகியை மகாராஜாவுக்கு ரொம்பவும் பிடித்திருப்பதாகத் தெரியப்படுத்தினான். அதற்கு ரமாமணி, "அப்படியானால் மகாராஜா என் தங்கையைக் கலியாணம் செய்து கொள்ளட்டுமே!" என்றாள். "மகாராஜாவின் உத்தேசமும் அதுதான்!" என்றான் மதோங்கர். ரமாமணி 'கலியாணம்' என்ற வார்த்தையினால் ஏமாந்து போய்விட்டாள். தன் தங்கைக்கு இதோபதேசம் செய்து சம்மதிக்கப் பண்ணினாள். "மகாராஜா எவ்வளவு பெரிய ரஸிகர் என்பதை நீயே பார்த்துக் கொண்டாய். அவருடைய ராஜ்யமோ ரொம்பக் கீர்த்தி வாய்ந்தது. ஐசுவரியத்துக்கு அளவேயில்லை. இப்படிப்பட்ட அரண்மனையில் மகாராணியாயிருக்கப் பூர்வ ஜன்மத்தில் நீ தவம் செய்திருக்க வேண்டும்" என்றாள். 'கலியாணம்' என்னும் கேலிக்கூத்து நடந்தது. அது கேலிக்கூத்து என்பது அந்தப் பெண்களுக்கு அப்போது தெரியாது. கொஞ்ச நாளைக்குப் பிற்பாடுதான் மகாராஜாவுக்கு ஏற்கெனவே மூன்று கலியாணங்கள் ஆகி அரண்மனையில் மூன்று ராணிகள் இருக்கிறார்கள் என்று தெரிய வந்தது.

இதையறிந்து ரமாமணி திடுக்கிட்டாலும் ஆசையையும் நம்பிக்கையையும் இழக்கவில்லை. அந்த மூன்று ராணிகளுக்கும் குழந்தை இல்லை என்பதை அவள் அறிந்துகொண்டாள். ஒருநாள் மகாராஜா கங்கா பாயைப் பார்க்க வந்திருந்தபோது அவரைத் தனியாக ரமாமணி சந்தித்தாள். கத்தியைக் காட்டிப் பயமுறுத்தினாள். தன் தங்கைக்குப் பிள்ளைக் குழந்தை பிறந்தால் அந்தக் குழந்தையை ரஜனிபூர் இளவரசனாக்க வேண்டும் என்று வாக்குறுதி பெற்றாள். அவ்விதமே மகாராஜாவிடம் ஒரு காகிதத்தில் எழுதிக் கையெழுத்து வாங்கிக் கொண்டாள்.

இதெல்லாம் மதோங்கருக்குத் தெரிந்தது. ரஜனிபூர் ராஜ்யம் யாருக்குப் போகவேண்டும் என்பது பற்றி அவனுக்கு வேறு யோசனை இருந்தது. ஆகையால் ரமாமணியின் சூழ்ச்சிக்கு அவன் பதில் சூழ்ச்சி செய்தான். ராணி கங்காபாய்க்குப் பிள்ளைக் குழந்தை பிறந்தால் அதைப் பிறந்தவுடனே கொன்றுவிடவேண்டும் என்று மருத்துவச்சியிடம் ஏற்பாடு செய்தான்.

மதோங்கர் மருத்துவச்சியிடம் பேசியதை மூன்றாவது மகாராணி கேட்டுக்கொண்டிருந்தாள். அவள் தர்ம சிந்தையும் உதார குணமும் படைத்த உத்தமி. ரமாமணியை அழைத்து வரச் செய்து மதோங்கரின் சிசுஹத்தி ஏற்பாட்டைப் பற்றிக் கூறினாள். பிரசவ காலம் நெருங்குவதற்கு முன்பு நாலாவது மகாராணியைப் பம்பாய்க்கு அழைத்துக்கொண்டு போய் விடும்படியும் அதற்கு வேண்டிய ஒத்தாசை தான் செய்வதாகவும் கூறினாள். மூன்றாவது மகாராணி கூறியது உண்மை என்பதற்கு வேண்டிய ஜோஷ்யங்கள் ரமாமணிக்குக் கிடைத்தன. மகாராஜாவோ அந்தச் சமயம் ஐரோப்பாவுக்குச் சென்றிருந்தார். ஆகவே ரமாமணி மூன்றாவது மகாராணியின் யோசனைப்படியே காரியம் செய்தாள். தங்கை கங்கா பாயை அழைத்துக்கொண்டு மதோங்கருடைய காவலாளிகளுக்குத் தெரியாமல் பம்பாய்க்குப் பிரயாணமானாள்.



ராஜபுத்திர நாட்டு வழக்கத்தைக் கங்காபாய் மேற்கொண்டு 'பர்தா' ஸ்திரீகளுக்குரிய முகமூடி அணிந்திருந்தாள். ஆகையால் அவளை அழைத்துக் கொண்டு பிரயாணம் செய்வதில் அதிகக் கஷ்டம் ஏற்படவில்லை. ஆனால் வேறுவிதமான கஷ்டங்கள் ஏற்பட்டன. கையில் கொண்டுவந்திருந்த பணமும் ரயில் டிக்கட்டுகளும் வழியில் காணாமற் போய்விட்டன. ஆகையால் பம்பாய் நகரை யடுத்திருந்த சின்ன ரயில்வே ஸ்டேஷன் ஒன்றில் டிக்கட் பரிசோதனை செய்த ரயில்வே உத்தியோகஸ்தன் அந்த ஸ்திரீகளிடம் டிக்கட் இல்லையென்று கண்டு அவர்களை இறக்கி விட்டுவிட்டான்.

இரண்டு பேரும் பெண்கள். ஒருத்தி ஒன்பது மாதக் கர்ப்பம். கையில் பணம் இல்லை. ஆனால் கங்காபாய் அணிந்துகொண்டிருந்த ஆபரணங்கள் இருந்தன. அவற்றில் ஒன்றை விற்றால் பணம் கிடைக்கும். எங்கே, எப்படி விற்பது? ரமாமணி நகையை விற்பதற்குப் போனால் ஒன்பது மாதத்துக் கர்ப்ப ஸ்திரீயை எங்கே விட்டு விட்டுப் போவது? அல்லது யாரிடம் சென்று உதவி கேட்பது?

அதுவோ சின்னஞ்சிறிய ஸ்டேஷன். வேளையோ இரவு வேளை. பம்பாயை அடுத்துள்ள சிறு ஸ்டேஷன்களில் ரயில் வரும்போது கூட்டம் கசகச வென்று இருக்கும். ரயில் போனதும் ஸ்டேஷன் நிர்மானுஷ்ய மாகிவிடும்.

ரமாமணி தங்கையை அழைத்துக் கொண்டு பிரயாணிகள் தங்கும் வெயிட்டிங் அறைக்குச் சென்றாள். கங்கா பாய்க்கு நிலைமை இன்னதென்று ஒருவாறு தெரிந்துவிட்டது. முகத்தை மூடியிருந்த பர்தா துணிக்குள்ளேயிருந்து விம்மல் சத்தம் கேட்கத் தொடங்கியது. ரமாமணி அவளுக்கு ஆறுதல் கூற முயன்றாள்.

அந்தச் சமயத்தில் "அது என்ன விம்மல் சத்தம்?" என்று தெரிந்து கொள்வதற்காக இராத்திரி ஸ்டேஷன் மாஸ்டர் வந்து எட்டிப் பார்த்தார். ஒரு பர்தா ஸ்திரீயையும் பர்தா இல்லாத இன்னொரு ஸ்திரீயையும் கண்டார். அவர்கள் மகாராஷ்டிர தேசத்

தவர் என்பதை அறிந்து கொண்டு மராத்தி பாஷையில் "என்ன விஷயம்?" என்று விசாரித்தார். அப்படி விசாரித்த ஸ்டேஷன் மாஸ்டர்தான் சீதாவின் தந்தை துரைசாமி ஐயர்.

ரமாமணிபாய் அறைக்கு வெளியே வந்து அந்த ஸ்டேஷன் மாஸ்டரிடம் தங்கள் நிலைமையை ஒருவாறு எடுத்துக் கூறினாள். இராத்திரி தங்க இடம் வேண்டும் என்றும் மறுநாள் காலையில் தன் தங்கையைப் பம்பாயில் ஒரு பிரசவ ஆஸ்பத்திரியில் சேர்ப்பதற்கு உதவி செய்ய வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டாள்.

"உதவி செய்தால் எனக்கு என்ன தருவீர்கள்?" என்று ஸ்டேஷன் மாஸ்டர் கேட்டார்.

துரைசாமிக்கு அப்போது சம்பளம் சொற்பம். அவருடைய மனைவி ராஜம்மாள் அதே சமயத்தில் பிரசவ ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டு முதல் குழந்தைப்பேற்றை எதிர் பார்த்துக் கொண்டிருந்தாள். ஆகையால் செலவுக்குச் சம்பளம் போதாமல் மேல் வரும்படி ஏதாவது கிடைத்தால் தேவலை என்ற நிலை ஏற்பட்டிருந்தது. ஆகையினாலேதான் "எனக்கு என்ன தருவீர்கள்?" என்று கேட்டார். அந்தப் பெண்களின் தோற்றத்தைப் பார்த்ததில் அவர்களிடம் பணம் நிறைய இருக்க வேண்டும் என்று அவருக்குத் தோன்றியது.

ரமாமணி, "நீங்கள் இந்தச் சமயத்தில் உதவி செய்தால் எங்களிடம் உள்ள எந்தப் பொருளைக் கேட்டாலும் கொடுத்துவிடத் தயார். என்னையே வேண்டுமானாலும் கொடுத்து விடுகிறேன்!" என்று சொன்னாள்.



துரைசாமிக்கு வெட்கமும் வியப்பும் உண்டாயின. இந்த மாதிரி பதிலை அவர் எதிர்பார்க்கவில்லை. மனதிற்குள், "சிவ சிவா! ஒரு மனைவியைக் காப்பாற்றுவதே என்னால் முடியாத காரியமா யிருக்கிறது. உன்னையும் கட்டிக்கொண்டு என்னத்தைச் செய்வது?" என்று எண்ணிக்கொண்டார். ஆயினும் அந்தப் பெண்களின் பரிதாப நிலை அவருடைய இதயத்தை இளகச் செய்திருந்தது.

"அப்படியெல்லாம் சொல்ல வேண்டாம், அம்மா! எனக்குப் பிரதிப் பிரயோஜனம் ஒன்றும் வேண்டியதில்லை. என்னால் முடிந்த உதவியை உங்களுக்குச் செய்கிறேன்!" என்றார்.

மறுநாள் காலையில் தன்னுடைய மனைவியை எந்தப் பிரசவ ஆஸ்பத்திரியில் சேர்த்திருந்தாரோ, அதே ஆஸ்பத்திரியில் கங்கா பாயையும் கொண்டு போய்ச் சேர்த்தார். ஆனால் இது விஷயத்தை அவருடைய மனைவியிடம் சொல்லவில்லை. சொன்னால் வீண் சந்தேகத்துக்கும் வீண் பேச்சுக்கும் இடமாகும் என்று சொல்லவில்லை.

தினந்தோறும் பிரசவ ஆஸ்பத்திரிக்குத் தம் மனைவியைப் பார்க்கப்போன போது ரமாமணியையும் துரைசாமி பார்த்து வந்தார். ரமாமணி துரைசாமியிடம் அளவில்லாத நன்றி பாராட்டினாள். அந்த நன்றி வெகு சீக்கிரத்தில் அத்தியந்த விசுவாசமாகவும் ஆருயிர்க் காதலாகவும் பரிணமித்து வந்தது. துரைசாமி தன்னுடைய மனதைக் கட்டுப்படுத்த எவ்வளவோ முயன்று பார்த்தார். ஆயினும் கட்டுப்படுத்த முடியவில்லை. முடியும்படியாக ரமாமணியும் விடவில்லை.

ராஜம்மாளும் கங்கா பாயும் ஒரே நாள் இராத்திரியில் ஆஸ்பத்திரியில் குழந்தைப் பேறு அடைந்தார்கள்!

இதற்குள்ளே மதோங்கர் எப்படியோ மோப்பம் பிடித்துக்கொண்டு அந்தப் பிரசவ ஆஸ்பத்திரிக்கு வந்து சேர்ந்தான். ரமாமணிக்கு இது தெரிந்தது. மதோங்கரின் கையில் அகப்படாமல் கங்காபாயுடன் வேறு இரகசிய இடத்துக்குப் போய்விட விரும்பினாள். அதற்கும் துரைசாமியின் உதவியைக் கோரினாள். ரமாமணியின் மோக வலையில் முழுதும் சிக்கிக்கொண்ட துரைசாமி அவளுடைய கோரிக்கைக்கு இணங்கினார். விஸ்தாரமான பம்பாய் நகரில் சுலபமாய்க் கண்டுபிடிக்க முடியாத இடத்தில் ஜாகை பிடித்து அவர்களைக் கொண்டுபோய் வைத்தார்.

ரமாமணியும் அவள் தங்கை கங்கா பாயும் குழந்தை தாரிணியும் அங்கே வசிக்கத் தொடங்கினார்கள்.

துரைசாமி தன்னுடைய மனைவி ராஜம்மாளுக்குத் தெரியாமல் ரமாமணியின் வீட்டுக்கு அடிக்கடி போய் வந்து கொண்டிருந்தார்.

தாரிணி பிறந்த வேளையில் பிறந்த ராஜம்மாளின் ஆண் குழந்தை சீக்கிரத்தில் இறந்து போயிற்று.

அந்தத் துக்கத்தை மறப்பதற்காகத் துரைசாமி அடிக்கடி ரமாமணியின் வீட்டுக்குப் போய்த் தாரிணியை எடுத்துக் கொண்டு சீராட்டினார்.

இப்படியாக நாட்கள் போய்க் கொண்டிருந்தன. ரஜனிபூர் மகாராஜா ஐரோப்பாவிலிருந்து திரும்பினார். ரமாமணி பம்பாயில் அவர் தங்கியிருந்த ஜாகைக்குச் சென்று பேட்டி காண விரும்பினாள். பேட்டி கிடைப்பதே கஷ்டமா யிருந்தது. சண்டை பிடித்துப் பேட்டி கண்டு மகாராஜாவிடம் கங்கா பாயின் நிலைமையைப் பற்றிச் சொன்னபோது ரஜனிபூர் மகாராஜா தமக்கு அவர்களைத் தெரியவே தெரியாது என்று சாதித்து விட்டார். ரமாமணிபாய் அவர் கைப்பட எழுதிக் கொடுத்திருந்த கடிதத்தை எடுத்துக் காட்டினாள்.

மகாராஜாவின் உத்தரவுப்படி அவருடைய ஆட்கள் பலவந்தமாக அந்தக் கடிதத்தை ரமாமணியிடமிருந்து பிடுங்கிக்கொண்டு அவளை வெளியே துரத்தி விட்டார்கள்.

ரமாமணி அளவில்லாத துயரத்துடனும் ஏமாற்றத்துடனும் ஜாகைக்குத் திரும்பிச் சென்றாள். கங்கா பாயிடம் எல்லா விவரங்களையும் சொன்னாள். கங்காபாய் மூர்ச்சித்து விழுந்தாள். அப்புறம் அவளுடைய உடல் நிலை நாளுக்கு நாள் சீர்கேடு அடைந்து வந்தது. சில மாதத்துக்கெல்லாம் கங்காபாய் இந்த மண்ணுலகை நீத்துச் சென்றாள்.



# வாழ்க்கை இப்போது என்னே குதூகலம்!

சுகமில்லாவிடின் சந்தோஷமேது?

குழந்தை அழுவதும் சிடுசிடுப்பதும் வீண் அசாத்தியம் எனக் கூறுவது அபத்தம். குழந்தையின் மெல்லிய சருமம் அடிக்கடி வரண்டு எரிச்சல் கொடுக்கக் கூடும். அவனுக்கு உண்மையில் வேண்டுவது அற்புதமான ஜான்ஸன்ஸ் பேபி பவுடர் தான்.

ஜான்ஸன்ஸ் பேபி பவுடர் பட்டுப்போன்று மிருதுவானது. உபயோகித்த நிமிஷத்திலிருந்தே எரிச்சலையாற்றி, குளுமையும் சுகமும் அளிக்கிறது. குழந்தையை குளிப்பாட்டிய பிறகும், உடை மாற்றும்போதும், தவிர, அவனுக்கு உஷ்ணமோ வியர்வையோ தோன்றும்போதும் உபயோகியுங்கள். இன்றே ஒரு டின் வாங்குங்கள். குழந்தை சௌகரியமாயிருக்கும்பொழுது எவ்வளவு குஷியாயிருக்கிறான் என்பதையும் கவனியுங்கள்.




குழந்தைக்குச் சிறந்தது — உங்களுக்கும் சிறந்தது

## ஜான்ஸன்ஸ்
### பேபி பவுடர்

ஜான்ஸன் & ஜான்ஸன் தயாரிப்பு • இந்தியாவிற்கு ஏகபோக விநியோகஸ்தர்கள் : ஐ. ஸி. ஐ. (இந்தியா) லிட்.

# சமரசமா, சத்தியாக்கிரகமா?

ரஜனி

கொழும்பு, 24—4—49

ஒன்பது லட்சம் இந்தியர்களுடைய வருங்காலத் தலைவிதியை நிர்ணயிக்கவும், சமரசமா அல்லது சத்தியாக்கிரகப் போராட்டமா என்ற பிரச்னையைத் தீர்க்கமாக ஆலோசனை செய்து முடிவு கட்டவும் இலங்கை இந்தியர் காங்கிரஸின் ஒன்பதாவது ஆண்டு மகாநாடு ஸ்ரீ ராஜலிங்கத்தின் தலைமையில் சென்ற வாரம் ஹட்டன் சரோஜினி நகரில் கூடியது. ஆச்சார்ய கிருபளானி தம்பதிகள் உள்படப் பல இந்தியத் தலைவர்களும் மகாநாட்டுக்கு அழைக்கப்பட்டு விஜயம் செய்திருந்தனர். லட்சக் கணக்கிலே இந்தியத் தொழிலாளரும் சரோஜினி நகரில் கூடியிருந்தார்கள்.

ஒன்பது லட்சம் இந்தியர்களுக்கும் நடப்பு வருடத் தலைவராக ஏகமனதாய்த் தேர்ந்தெடுக்கப்பட்ட ஸ்ரீ ராஜலிங்கம் தமது அக்கிராசனப் பிரசங்கத்தில் காங்கிரஸ் முன்னுள்ள பிரச்னையைத் தெளிவாக எடுத்துரைத்தார். "பலவகையான அநீதிகளும் அவமானங்களும் நிறைந்த பிரஜா உரிமைச் சட்டத்தை மேற்கொண்டு உரிமைகளைப் பெறுவதற்காகப் பிறகு போராட்டம் நடத்துவதா? அல்லது சட்டத்தை நிராகரித்து அதர்மத்தை ஆரம்பத்திலேயே எதிர்த்துப் போராடுவதா?" என்பதைத் தீர்மானிக்கும்படி அவர் மகாநாட்டைக் கேட்டுக் கொண்டார். இந்தியாவின் நட்பை இலங்கை உதாசீனமாக உதறித் தள்ளி விட்டதென்று வரவேற்புக் கமிட்டித் தலைவரும் பார்லிமெண்டு அங்கத்தினருமான ஸ்ரீ கே. குமாரவேலு முழங்கினார். இந்தியா ஹைகமிஷனர் ஸ்ரீ வி. வி. கிரி முக்கியமான விஷயத்தைத் தெளிவு படுத்தினார். இலங்கை இந்தியர் பிரச்னை தீர்ந்துபோன விஷயம் என்றும் இந்திய சர்க்காரின் சம்மதத்துடன் சமரச உடன்பாடு ஏற்பட்டுவிட்டது என்றும் பிரதமர் ஸ்ரீ சேனநாயகா பம்பாயில் சொன்னது சரியல்ல. பிரச்னை தீரவுமில்லை; ஸ்ரீ சேனநாயகா ஒருதலைப் பட்சமாகச் செய்த முடிவுகளை இந்திய அரசாங்கம் ஒப்பவுமில்லை என்று ஸ்ரீ கிரி சந்தேகத்துக்கு இடமில்லாமல் எடுத்துச் சொன்னார்.



ஸ்ரீ ராஜலிங்கம்

## சத்தியாக்கிரகம் ஆரம்பமாகலாம்

“இலங்கையும் இந்தியாவும் அடிமை நாடுகளாயிருந்த காலத்தில் சுதந்திர இலட்சியத்துக்காக ஒத்துழைத்தன. அடிமைத் தனத்தில் நிலவிய ஒற்றுமை சுதந்திரமடைந்தவுடன் வேற்றுமையாக மாறிவிட்டது! இலங்கைத் தலைவர்களிடம் நல்லெண்ணம் தோன்றினால் இந்த வேற்றுமைகளைப் போக்குவது பிரமாத விஷயமில்லை. சத்தியாக்கிரகப் போரில் இறங்குவதாயிருந்தால் ஒரு விஷயத்தை ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். பிறருக்குத் தீங்கு செய்யாமல் அஹிம்சையைக் கடைப்பிடிப்பவரே உண்மைச் சத்தியாக்கிரகியாவர். அந்த சத்தியாக்கிரகம்தான் வெற்றி தரும்” என்று கிருபளானி உபதேசம் செய்தார். பிரஜா உரிமைச் சட்டத்தில் கலியாணமானவர்களுக்கும் பிரம்மசாரிகளுக்கு மிடையே வேற்றுமை கற்பிக்கப்பட்டிருப்பதை ஸ்ரீமதி சுசேதா கிருபளானி கண்டித்தார்.

இரண்டாவது நாள் கூட்டத்தில் பிரஜா உரிமைச் சட்டத்தை நிராகரிப்பதென்றும், பூரண பிரஜா உரிமைகள் பெறுவதற்கு உறுதியுடன் போராடுவதென்றும் மகாநாடு ஏகமனதாகத் தீர்மானித்தது.

## அசோக வனமும் ராவணன் குகையும்

ராம ராவண யுத்தம் நடைபெற்றதாகக் கூறப்படும் இடம் ஆஸ்திரேலியா என்றும், ஆஸ்திரேலியா கண்டத்துக்கே அந்தக் காலத்தில் இலங்கை யெனப் பெயர் இருந்ததென்றும் சரித்திர ஆராய்ச்சியாளர்களில் ஒரு

சாரார் அபிப்பிராயப் படுகிறார்கள். இது சம்பந்தமான உண்மையைக் கண்டறிவதற்காக ஹிமாலய வாசியான சிவானந்தன் ஸஹாய் என்ற பெரியார் இப்போது இலங்கைக்கு வந்திருக்கிறார். ராமாயண சம்பந்தமான சரித்திர ஆராய்ச்சியில் பல வருட காலம் ஈடுபட்டுள்ள அவரிடம் சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த பல தஸ்தாவேஜுகளும் தகவல்களும் இருக்கின்றன. இலங்கையில் ராமாயணம் சம்பந்தப்பட்ட இடங்களை நேரில் பார்வையிட்டு அப்பகுதிகளில் கிடைக்கக் கூடிய தகவல்களைச் சேகரிப்பதில் சென்ற சில தினங்களாகத் தீவிரமாய் ஈடுபட்டிருக்கிறார்.

ஸ்ரீ ஸஹாய் அவிசாவிலை ஜில்லாவில் சுற்றுப் பிரயாணம் செய்து சீதாபிராட்டியார் நீராடியதாகக் கூறப்படும் ஒரு நீரோடையைக் கண்டு பிடித்திருக்கிறார். தம்முடன் கொண்டு வந்திருக்கும் சில குறிப்புகளின் உதவியைக் கொண்டு அவிசாவிலை யாத்ரீகர் விடுதியிலிருந்து சுமார் ஒரு பர்லாங் தூரத்திலுள்ள சீதாவாகா என்னுமிடத்துக்குச் சென்று அவர் ஆராய்ச்சிகள் நடத்தினார். இந்த இடத்தின் அருகில் சிங்களத்திலே ஹக்கல மரம் என்று அழைக்கப்படும் அசோக மரங்கள் ஏராளமாயிருக்கின்றன. அவற்றின் அருகில்தான் நீரோடை இருக்கிறது. இந்த அசோக வனத்தில்தான் பிராட்டியார் முதல் முதலாகச் சிறை வைக்கப்பட்டிருந்தா ரென்றும் அசோக வனத்திற்கு அருகில் அனுமார் தீ வைத்த பிறகு பிராட்டியாரை ராவணன் வேறிடத்தில் கொண்டு போய் வைத்தா னென்றும் ஸஹாய் கூறுகிறார்.

ராமனின் படைகள் ரத்னபுரியில் முகாம் போட்டிருந்ததாயும் லக்ஷ்மணன் தலைமையில் ஒரு சேனை அவிசாவிலையை நோக்கி வந்தபொழுது சீதையைப்போல மெழுகினால் ஒரு பதுமையைச் செய்து அதை இந்திரஜித்தன் சிரச்சேதம் செய்தானென்றும் அதைக் கண்ட லக்ஷ்மணன் கலக்கப்போனான் என்றும் ராமாயணக் கதையிலே நாம் படிக்கிறோம். இவ்விதம் சீதையைப் போல மெழுகு பொம்மையைச் செய்து சிரச் சேதம் செய்த இடமே இன்று 'சீதாவாகா' என்றழைக்கப்படுவதாக ஸ்ரீ ஸஹாய் கருதுகிறார். 'வாகா' என்றால் சிங்களத்தில் 'கொல்லப்பட்ட இடம்' என்று அர்த்தம். சீதைப் பதுமையைக் கொன்ற இடத்துக்கு அன்று முதல் 'சீதா வாகா' என்ற பெயர் வழங்கி வருகிறதாம்.

# மாட்டினி ஷோவாம்!

1. காசைக் கொடுத்தாலும் தேளைக் கொட்டிக் கொள்ளும்
கதையைக் கேட்டதுண்டோ? — ஐயா
கதையைக் கேட்டதுண்டோ?

ஆசைப்பட்டு மூக்கை அறுத்துக் கொண்டே அழும்
அழுகைப் பார்த்ததுண்டோ? — ஐயா
அழுகைப் பார்த்ததுண்டோ?

2. 'மாட்டினி ஷோ' என்று மத்தியான வேளையில்
மாளாத வெய்யிலிலே — ஐயா
மாளாத வெய்யிலிலே!

கூட்டத்தைப் பாருங்கள் 'க்யூ'விலே நிற்குது
கொதிக்கும் வெய்யிலிலே — ஐயா
கொதிக்கும் வெய்யிலிலே!

3. வீட்டுக்கொரு சின்ன வேலைசெய் யென்றால்
வேதனை கொள்ளுவார்கள் — பிள்ளைகள்
வேதனை கொள்ளுவார்கள்

ஆட்டமென்றால் கடும் வெய்யிலும் உஷ்ணமும்
ஆனந்த மாய்விடுமோ! — ஐயா
ஆனந்த மாய்விடுமோ!

4. கண்ணுக்கெட்டும்வரை நின்றிடுதே 'க்யூ'வும்
காட்சியே காட்சி ஐயா — இந்தக்
காட்சியே காட்சி ஐயா!

புண்ணியவான் எப்போ வந்து 'புக்கிங்' அறைப்
பூட்டைத் திறப்பானோ — வந்து
பூட்டைத் திறப்பானோ?

5. சண்டைகள் தான்போட்டு மண்டை உடைத்தாலும்
முண்டியே தீர்த்திடுவார் — டிக்கட்டுக்கு
முண்டியே தீர்த்திடுவார்!

துண்டு தொலைந்திடும் துணியுங் கிழிந்திடும்
திண்டாடி நின்றிடுவார் — அவர்
திண்டாடி நின்றிடுவார்!

# கூட்டத்தைப் பாரும்!



6. அண்டையிலுள்ளவர் ஆகாசம் பார்த்திட்டால்
‘அபேஸ்’ செய்திடுவார் — பணப்பையை
‘அபேஸ்’ செய்திடுவார்!

‘கண்டதுண்டோ’வென்று கையைப் பிசைகுவார்
காணச் சகியாது — அவரைக்
காணச் சகியாது!

7. இடித்துநெருக்கி எழும்பித் திமிறி
இடத்திலே உட்கார்ந்தால் — ஒரு
இடத்திலே உட்கார்ந்தால்

படத்தைத்திரையிலே பார்க்குமுன்னுல் படும்
பாடுகள் கொஞ்சமுண்டோ? — படும்
பாடுகள் கொஞ்சமுண்டோ?

8. சுற்றியும் வியர்வையின் நாற்றம் கமழும்
சுருட்டுப் புகை கமறும் — ஐயா
சுருட்டுப் புகை கமறும்!

இற்று விடும்உடல் எர்த்திடும் புழுக்கம்
இருட்டும் சேர்ந்துவிடும் — கொட்டகை
இருட்டும் சேர்ந்துவிடும்!

9. இத்தனை கஷ்டமும் பட்டு வெளிவந்து
என்னதான் கண்டீரென்ருல் — ஐயா
என்னதான் கண்டீரென்ருல்

‘சுத்த மட்டம்! வெறும் குப்பைப்படம்!’ என்று
சுளிங்கிச் சொல்லிடுவார் — முகம்
சுளிங்கிச் சொல்லிடுவார்!

10. பட்டப்பகலிலே கொட்டகைக் குள்விட்டுப்
படத்தைக் காட்டிக் கொல்லும் — குப்பைப்
படத்தைக் காட்டிக் கொல்லும்

கெட்ட வழக்கத்தை விட்டொழிக்க வொரு
சட்டம் பிறந்திடணும் — ஐயா
சட்டம் பிறந்திடணும்!

— காட்டூர் கண்ணன்

# சின்னஞ் சிறு பிராயத்திலே....

எம். சரோஜினி

"பாலூட்டும் தாயார் ஒரு பக்கத்திலிருந்து மறு பக்கத்துக்குக் குழந்தையை மாற்றும்போது அது வீறிட்டு அழுகிறது. மீண்டும் தனக்குப் பாலூட்டத்தான் தாயார் அவ்வாறு செய்கிறாள் என்பதைக் குழந்தை உணருவதில்லை. அந்தக் குழந்தையின் ஆற்றாமையைப் போன்றதுதான் மனிதன் மரணத்தைக் கண்டு மனம் வருந்துவதும்" என்கிறார் கவியரசர் ரவீந்திரநாதர்.

எனினும் மனம் கேட்கிறதா? இறந்து போன எங்கள் அருமைக் கோபுவை இன்று நினைத்தாலும் கண்கள் நீரைப் பொழிகின்றன. தன் மகன் கோபுவை நாராயணசாமி எப்படி நேசித்தானோ அதேபோல்தான் நானும் நேசித்து வந்தேன். எங்கள் இருவருடைய அன்பையும் தூக்கி அடித்து விட்டது என் குழந்தை கிட்டு, கோபுவிடம் கொண்டிருந்த அன்பு.

நாங்களாவது பெரியவர்கள்; ஒரு சமயம் வருந்தினாலும் மறு சமயம் ஒருவாறு ஆறுதலடைந்து விடுகிறோம். குழந்தை கிட்டுவைத்தான் பார்க்கச் சகிக்கவில்லை. அவன் எப்பொழுதும் அதே ஏக்கமாக இருக்கிறான். மூன்றே மூன்று வயது நிரம்பிய கிட்டுவின் பிஞ்சு நெஞ்சில் ஏக்கம் என்ற பிசாசு எப்படியோ குடி புகுந்து விட்டது.

• • •

நானும் நாராயணசாமியும் நெடுநாளைய நண்பர்கள். இதில் ஆச்சரியம் என்னவென்றால் நாங்கள் இருவரும் ஒரே தாயார் வயிற்றுச் சகோதரிகளை மணந்து கொண்டதுதான். இதனால் என் மனைவி பத்மாவும் நாணுவின் மனைவி லக்ஷ்மியும் எங்களைப்போலவே ஒற்றுமையாக இருந்து வந்தனர். மாம்பலத்தில் இருந்த ஒரு சிறு பங்களாவில் நாங்கள் எல்லோரும் ஏக குடும்பமாகவே வசித்து வந்தோம்.

என் மகன் கிட்டு பிறந்த ஒரு வருஷத்திற்கெல்லாம் கோபு பிறந்தான். குழந்தைகள் இருவரும் அன்னியோன்னியமாகப் பழகினார்கள். திடீரென்று ஒரு நாள் கோபுவுக்கு ஜுரம் வந்தது. சாதாரண ஜுரந்தான்; கடைசிவரை டாக்டர் "உயிருக்குப் பயமில்லை" என்றே சொல்லி வந்தார். ஆனால் எங்கள் அனை வரையும் எப்படியோ ஏமாற்றிவிட்டுக் கோபு போயே போய்விட்டான்.

கோபுவின் பிரிவைச் சகிக்க முடியாமல் தானோ என்னவோ, கிட்டு ஏதோ இனம் தெரியாத வியாதியினால் படுக்கையாய்ப் படுத்துவிட்டான். டாக்டர் மருந்துகளை மாற்றி மாற்றிக் கொடுத்துப் பார்த்தார்; ஒன்றும் பலனில்லை.

கோபு போன விடத்துக்கே கிட்டுவும் போய் விடுவானோ என்று ஒரே பயமாக இருந்தது எங்களுக்கு. நானாவது கொஞ்சம் தைரியமாக இருந்தேன். என்னுடைய நண்பன் நாராயணசாமியோ பெண்பிள்ளைகளைப்போல அழவே ஆரம்பித்துவிட்டான்.

அக்கம் பக்கத்திலிருந்து குழந்தையைப் பார்க்க வந்திருந்தவர்கள், "ஜாகை மாற்றுங்கள், ஸார்! ஜாகை மாறினால் குழந்தைக்குப் பழைய ஞாபகங்களெல்லாம் மறந்துவிடும்" என்று கூறினார்கள். எனக்கும் அது சரியான யோசனை என்றே பட்டது.

"எதற்கும் டாக்டரை ஒரு வார்த்தை கேட்டுவிடலாம்" என்றான் நண்பன் நாராயணசாமி.

"இந்தக் காலத்தில் வீடு வேறே கிடைக்க வேண்டுமே!" என்றேன் நான்.

"இங்கேயேதான் இருக்க வேண்டுமா, என்ன? கொஞ்ச நாட்கள் நாம் பகம்பூர் கிராமத்துக்குச் சென்று இருந்தால் போச்சு!" என்றான் நாராயணசாமி.

கடைசியில் இருவரும் டாக்டரைக் கேட்டோம். "ஜாகை மாற்றுவது நல்லதுதான்; அதைவிட உதகமண்டலத்துக்குப் போவது நல்லது. அங்கே மற்றக் குழந்தைகளோடு சேர்ந்து பழகினால் ஒரு வேளை சரியாய்ப் போய்விடும்" என்றார் டாக்டர்.

## 2

நாராயணசாமி குழந்தைகள் நிறைய இருக்கும் வீடாகப் பார்த்துக் கொண்டு வருகிறேன் என்று எங்களிடம் சொல்லிவிட்டு உதகமண்டலத்துக்குச் சென்றான். அங்கே வீடு கிடைத்ததும் நாங்கள் புறப்பட்டுவிடுவது என்று தீர்மானித்தோம்.

உதகமண்டலத்துக்குச் சென்ற நாராயணசாமி சீக்கிரமாகவே வீடு பார்த்துக் கொண்டு திரும்பி வந்தான். பிரயாண ஏற்பாடுகளில் முனைந்திருந்த என்னைப் பார்த்து, "எப்பா, கோபு கிட்டவா நாம் போகப்போறோம்?" என்று கேட்டான்

கிட்டு. என்னால் பதில் சொல்ல முடியவில்லை. கண்களில் நீர் சுரந்துவிட்டது.

"ஏம்பா, கோபுகிட்டவா போகப் போறேம்னு கேட்டா அழறியே?" என்றான் கிட்டு, சிணுங்கிக்கொண்டே.

நான் கண்களைத் துடைத்துக் கொண்டு, "ஆமாம்" என்று தலையை ஆட்டி வைத்தேன். அவனும் ஒருவாறு சமாதானமடைந்தான்.

ஆனால் உதகமண்டலத்துக்கு வந்த பிறகும் குழந்தையின் மனநிலையில் அப்படியொன்றும் பிரமாத அபிவிருத்தி கிடையாது. இத்தனைக்கும் நாங்கள் இருந்த வீட்டில் குழந்தைகளுக்குப் பஞ்சமில்லை. அந்தக் குழந்தைகளோடு கிட்டு எப்போதோ ஒரு சமயம்தான் விளையாடப் போவான். மற்ற நேரங்களில், "கோபு, கோபு!" என்று ஸ்மரித்துக் கொண்டிருப்பான்.

ஒரு நாள் "ஏப்பா, கோபுகிட்ட போகப் போறேம்னு சொன்னியே, இங்கே அவனைக் காணவே காணோமே!" என்றான் கிட்டு.

"ஏன் இல்லை? அதோ பார், அந்தப் பாப்பாதான் கோபு!" என்று நான் வீட்டு வராந்தாவில் விளையாடிக் கொண்டிருந்த ஒரு குழந்தையை அவனுக்குச் சுட்டிக் காட்டினேன்.

"போப்பா, அவன் கோபு இல்லே! அவனுக்கு நன்னாவே விளையாடத் தெரியலையே!" என்று அந்தக் குழந்தையின் மீது குற்றம் சாட்டி ஏங்கினான் கிட்டு.

அதற்குமேல் அவனிடம் என்னத்தைச் சொல்வது? — நாங்கள் உதகமண்டலத்துக்கு வந்தே நான்கு மாதங்களாகி விட்டன. நாராயணசாமி வேலைத் தொந்தரவால் உதகமண்டலத்துக்கு வரமுடியாமற் போனாலும், அடிக்கடி கடிதம் எழுதிக் கிட்டுவைப் பற்றி விசாரித்துக் கொண்டிருந்தான்.

இந்நிலையில் என் தகப்பனாரின் நண்பர் ஒருவரை நான் தற்செயலாக உதகமண்டலத்தில் சந்திக்க நேர்ந்தது. அவரை முதலில் என்னால் அடையாளம் கண்டு கொள்ள முடியவில்லை. அப்புறம் பேச்சுவாக்கில் ஒருவரையொருவர் தெரிந்து கொண்டோம்.

அவருடைய பெயர் அனந்தகிருஷ்ணன். டெல்லியில் ஏதோ சர்க்கார் உத்தியோகத்தில் இருப்பதாகவும், மாதம் ஆயிரம் ரூபாய் வரும்படி வருவதாயும் அவரிடம் கேட்டுத் தெரிந்து கொண்டேன். அவர் என்னைத் தம்முடன் டெல்லிக்கு வரும்படி அழைத்தார். நீண்ட யோசனைக்குப் பிறகு நான் டெல்லிக்குப் போவது என்று தீர்மானித்தேன் — குழந்தை கிட்டுவை உத்தேசித்துத்தான்! டெல்லியிலும் சென்னையைப்போல் குடியிருக்க வீடு கிடைப்பது கஷ்டமாம். இருந்தாலும் அனந்தகிருஷ்ணன் தம்முடைய பங்களாவிலேயே எனக்கும் இடம் தருவதாகச் சொன்னார். நான் அவருடன் டெல்லிக்குக் கிளம்பினேன்.

டெல்லியில் நானும் பத்மாவும் சுகமாகக் காலங் கழித்தோம். கிட்டு மாத்திரம் கோபுவை மறக்கவேயில்லை; அவன் உடல் நிலையும் வரவர மோசமாகிக் கொண்டே வந்தது.

டெல்லிக்கு வந்த பிறகு நாராயணசாமியிடமிருந்து எங்களுக்கு ஒரு கடிதமும் வரவில்லை. ஒருவேளை நான் இங்கு வந்து விட்டேனென்று அவனுக்குக் கோபமோ, என்னவோ?

எப்படியோ இரண்டு வருஷ காலம் ஓடி மறைந்து விட்டது. நாராயணசாமிக்கு நான் பல கடிதங்கள் போட்டும் பதில் இல்லை; எனக்கு ஒரே வருத்தமாயிருந்தது.

இதற்கு மத்தியில் கிட்டு வேறு, "அப்பா, எப்போப்பா நாம் பட்டணம் போறது? எனக்குக் கோபுவைப் பார்க்க வேண்டும் போலிருக்கே; நீ கூட்டிண்டு போகாட்டா நான் அழுவேன்!" என்று என்னைப் பயமுறுத்த ஆரம்பித்து விட்டான்.

"உங்கள் நண்பர் நாம் போட்ட கடிதங்களுக்கெல்லாம் பதிலே எழுதவில்லையே! நான்கூட லக்ஷ்மிக்கு நாலைந்து கடிதங்கள் எழுதினேன்; பதிலே வரவில்லையே!" என்றாள் பத்மா வருத்தத்துடன்.

"எனக்கும்தான் ஒன்றும் புரியவில்லை. வரவர இந்த டெல்லி வாசமும் வெறுத்து





"நான் பட்டணம் போகப் போகிறேன். உனக்கு ஏதாவது வேண்டுமானால் வாங்கி வருகிறேன்!"

"அடுத்த வீட்டுக் குப்புசாமி அவனுடைய போட்டோ வச்சிருக்கான்! அதுமாதிரி என் போட்டோ ஒன்று வாங்கிண்டு வாங்கோ, தாத்தா!"

---

விட்டது. குழந்தை பிட்டுவுக்கும் உடம்பு சரியான பாடாயில்லை. மறுபடியும் சென்னைக்கே போய் விடுவோமா?" என்றேன் நான்.

"அப்படியே செய்வோம். குழந்தையும் பட்டணம் போக வேண்டுமென்று துடியாய்த் துடிக் னே!" என்றாள் பத்மா.

அன்று மா ய அனந்த கிருஷ்ணனிடம் நான் என்னுடைய விருப்பத்தைத் தெரிவித்தேன்.

"ஏன், இங்கே உங்களுக்குச் சௌகரியமாயில்லையா?" என்று கேட்டார் அனந்த கிருஷ்ணன்.

"அதெல்லாம் ஒன்றும் இல்லை; வந்து ரொம்ப நாளாயிற்றல்லவா? மறுபடியும் பட்டணம் போக வேண்டுமென்று ஆவலாக இருக்கிறது!" என்றேன் நான்.

"சரி, உங்கள் இஷ்டம். பிரயாண ஏற்பாடுகளைக் கவனியுங்கள். ஆகாச விமானத்திலேயே உங்களை அனுப்பி விடுகிறேன்" என்றார் அனந்த கிருஷ்ணன்.

3

நாராயணசாமிக்கு நான் வருவதாகத் தந்தி கொடுத்திருந்தேனாகையால் அவன் சென்னை மீனம்பாக்கத்தில் காருடன் வந்து காத்துக் கொண்டிருந்தான். குழந்தை பிட்டுவைக் கண்டதும் அவன் வாரி அணைத்துக் கொண்டான். கார் மாம்பலத்திலுள்ள எங்கள் வீட்டை நோக்கிப் பறந்து கொண்டிருந்தது.

"என்னடா, நான் போட்ட கடிதங்களுக்கெல்லாம் பதிலே போடவில்லை?" என்று நான் நாராயணசாமியை நோக்கிக் கேட்டேன்.

"உன்னுடைய டெல்லி விலாசத்தை எங்கோ தொலைத்து விட்டேன். அப்புறம் உன்னிடமிருந்து வந்த கடிதங்களிலும் நீ முழு விலாசம் கொடுக்கவில்லை. நீதான் அப்படியென்றால் உனக்கு வாய்த்தவனும் உன்னைப் போலவேதான் இருக்கிறான்! அவன் லக்ஷ்மிக்கு எழுதிய கடிதங்களிலும் விலாசம் எழுதவில்லை!" என்றான் நாணு.

சிறிது நேரத்துக்கெல்லாம் எல்லோரும் வீட்டை அடைந்தோம். அங்கே எனக்கு ஓர் அதிசயம் காத்துக் கொண்டிருந்தது. வீட்டின் முன் ஹாலில் இறந்துபோன எங்கள் அருமைக் கோபு உட்கார்ந்து கொண்டிருந்தான்!

அவனைக் கண்டதுதான் தாமதம்; "கோபு, கோபு!" என்று கத்திக் கொண்டே ஓடினான் பிட்டு.

"இதென்ன, நான் கனவு காண்கிறேனா? கோபு இறந்துபோனது உண்மையில்லையா?" என்று நான் நாராயணசாமியை ஆச்சரியத்தோடு கேட்டேன்.

"இது கனவும் இல்லை; இவன் கோபுவும் இல்லை! இவன் கோபுவின் தம்பி! அதாவது, சின்னக் கோபு" என்றான் நாணு சிரித்துக்கொண்டே.

அப்பொழுதுதான் எங்களுக்கு ஞாபகம் வந்தது—நாங்கள் உதகமண்டலத்துக்குப் போகும்போது லக்ஷ்மி மூன்று மாதம் ஸ்நானம் செய்யாமல் இருந்த விஷயம்!—அதற்குப் பிறகு கேட்கவேண்டுமா?

"தத்ரூபம் இவன் கோபுவைப் போலவே இருக்கிறானே?" என்றேன் நான்.

"ஆமாம், பிட்டுவையே இவன் ஏமாற்றி விட்டானே — அதைச் சொல்லு!" என்றான் நாணு.

"இனி நம்முடைய கவலை விட்டது. குழந்தைகள் இருவரும் அதற்குள் சிநேகமாகிவிட்டார்கள், பாருங்கள்!" என்றாள் லக்ஷ்மி.

நாங்கள் அனைவரும் குழந்தைகள் இருந்த பக்கம் திரும்பினோம். பிட்டு சின்னக் கோபுவின் சின்னக் கன்னத்தைக் கிள்ளிக் கொஞ்சிக் கொண்டிருந்தான். எத்தனையோ நாட்களுக்குப் பிறகு அந்தச் சின்னஞ்சிறு குழந்தையின் முகம் இன்று தான் மலர்ந்திருந்தது!

ஷாலிமார் தயாரிப்புகளை
ஆர்டர் செய்யும்போது,
எந்த வேலைக்காக
என்பதைத் தெரிவிக்கவும்.

# வெயிலால்
கெடாது
# தண்ணீரால்
கெடாது
# உஷ்ணத்தால்
கெடாது



வெய்யில், தண்ணீர், உஷ்ணத்தால் கெடாததும், ஸ்பிரிட்டால் அழிக்க முடியாததுமான ஷாலிமார் ஸூபர்ஸ்பார் வார்னிஷ் மிக உயர்தரமானது.

## அடித்தாற் போல் சொல்லுங்கள்... ஷாலிமார் ஸூபர்ஸ்பார்

மிகச் சிறந்த எண்ணெய் வார்னிஷ்

SPX 55

**SHALIMAR PAINT, COLOUR & VARNISH CO., LTD.,**
Post Box 136, Madras 1. Importers & Distributors for Ceylon :
Lewis Brown & Co., Ltd., Post Box 85, Colombo




# சிரித்தது வெங்கட் சீயம்!

டி. கே. சி.

இரணியனுக்கு மகன் சொல்லுவதெல்லாம் வேடிக்கையாக இருக்கிறது. அந்த வேடிக்கையிலேயே பேச்சு மேலே போகிறது.

"ஆமாம் அப்பா, தேவர்கள் என்று சொல்லுகிறவர்களுக்கும் உனக்கும் மாத்திரம் தெரிகிறான் என்று சொல்லுகிறாயே, அந்தக் கடவுளை இந்தத் தூணிலிருந்து கொஞ்சம் வரச் செய்யேன், பார்க்கலாம்?" என்றான்.

'உம்பர்க்கும் உனக்கும்ஒத்(து) இவ்
உலகெங்கும் பரந்துளானைக்
கம்பத்தின் வழியேகாணக்
காட்டுதி; காட்டாயேல்,
கும்பத்தின் கரியைக்கொன் மாக்
கொன்றெனெ, நின்னைக்கொன்றுன்
செம்பொத்த குருதிதேக்கி
உடலையும் தின்பென்' என்றான்.

[கம்பத்தின் வழியே காணக் காட்டுதி: இந்தத் தூணின் வழியாக வரும்படி காட்டிவிடு: காட்டாயேல்: காட்டாமல் போனாலோ; கும்பத்தின் கரியை: பெரிய மஸ்தகத்தை உடைய யானை இருக்கிறது பார், அதை; கொன்மா கொன்றென: சிங்கம் கொன்றது போல; உன் செம்பு ஒத்த குருதி தேக்கி; உன்னுடைய சிவந்த இரத்தத்தை வயிறு முட்டக் குடித்து.

குறிப்பு:—இரணியனுக்குக் கோபம் இருக்கவே செய்கிறது—"அடங்காத பையனும் இருக்கிறானே!" என்பது பற்றித்தான் அவன் கோபம். ஆனாலும் சின்னப் பையன்தானே என்ற காரணத்தால் அருமையும் ஹாஸ்யமும் கலந்த ஒரு பாவத்தில் பேசுகிறான். அது செய்யுளில் ஒளிக்கிறது.

"கொல்லுவேன், இரத்தத்தை வயிறு முட்டக் குடிப்பேன், உடலைத் தின்னுவேன்!" என்பதெல்லாம் நேர்பொருளிற் கொள்ள வேண்டிய காரியம் அல்ல.]

* * *

பிரகலாதன் சொல்லுகிறான்:

"என் உயிர் என்பது எனக்கு உரியதல்ல. இந்த உடம்பிற்கே உரியதல்ல. நித்தியமாய் உள்ள கடவுளின் ஒரு

பாகம்தான். உண்மை இப்படியிருக்கும்போது, என்னை நீ கொல்லுவது என்பது முடிகிற காரியமா? என்னைக் கொல்லுவதும் பேரண்டம் முழுதும் வியாபித்திருக்கும் பரம்பொருளைக் கொல்லுவதும் ஒன்றுதான்!"

'என்னுயிர் நின்னால்கோ றற்(கு)
எளியதோ அன்று; யான் முன்
சொன்னவன் தொட்டதொட் ட
இடந்தொறும் தோன்றான்ஆ யின்,
என்உயிர் யானேமாய்ப் பன்,—
பின்னும்வாழ் வுகப்பல்என் னின்,
அன்னவற்(கு) அடியேன்அல் லேன்'
என்றனன் அறிவின்மிக் கான்.

[கோறற்கு: கொல்லுதற்கு; யான் முன் சொன்னவன்: நான் முன்னமே சொன்ன அந்த இறைவன்; என் உயிர் யானே மாய்ப்பன்: என் உயிரை நானே மாய்த்துக் கொள்ளுவேன்; பின்னும் வாழ்வு உகப்பல் என்னின்: பின்னும் வாழலாம் என்று எண்ணி வாழ்ந்திருக்க நேர்ந்தால் வெகு கீழான ஜென்மமாய் இருந்தொழிவேனாக!—அதாவது, அந்த இறைவனுக்கு அடியவன் என்ற உணர்ச்சி இல்லாமலே வாழ்வேனாக!

குறிப்பு:—"அன்னவற்கு அடியேன்!" என்றால், நான் வேறல்ல—பரம்பொருளோடு ஆனந்த மயத்தில் ஒன்றாய் இருக்கும் நிலை என்பது பொருள். அந்த நிலையில்லாமல் போகக் கடவது என்கிறான்.]



கணவன்:— சமையல்காரன் என்றால் அவனைத்தான் சொல்லவேணும். அந்த அம்மாவிடம் என்ன மரியாதையாக இருக்கிறான்! அவள் வார்த்தைக்கு மறு வார்த்தை சொல்லாமல் எல்லாக் காரியங்களையும் செய்துகொண்டு...!

மனைவி:— உஸ்! அவன் சமையல்காரன் இல்லை; அந்த அம்மாவின் கணவன்!

* * *

"தொட்டத் தொட்ட இடம் எல்லாம் தோன்றுவான் இறைவன்!" என்றல்லவா பிரகலாதன் சொன்னான்? "அப்படியா காரியம்? இருக்கட்டும்!" என்று சொல்லி மிக்க இகழ்ச்சி தோன்றப் பெருஞ் சிரிப்புச் சிரிக்கிறான் இரணியன்:

நசைபிறந்(து) இலங்கப்பொங் கி,
நன்றுநன்(று) என்னநக் கு,
விசைபிறந்(து) உருமுவீழ்ந் த(து)
என்னஓர் தூணின்,வென் றி
இசைதிறந்(து) அமர்ந்தகை யால்
எற்றினன், எற்றலோ டும்
திசைதிறந்(து) அண்டம்கீ றி
சிரித்தது வெங்கட்சீ யம்!

[நசை பிறந்து இலங்கப் பொங்கி: இகழ்ச்சி பாவமானது நன்றாய் வெளியாகும்படி ஆங்காரம் கொண்டு; நன்று நன்று என்ன நக்கு: ரொம்ப அழகு என்று சிரித்து; விசை பிறந்து உருமு வீழ்ந்தது என்ன: மிகுதியான வேகம் உண்டாகி அந்த வேகத்தோடு இடி வந்து விழுந்ததுபோல; ஓர் தூணில்: பக்கத்தில் இருந்த ஒரு தூணில்; வென்றி இசை திறந்து அமர்ந்த கையால் எற்றினன்: வெற்றிக்கும் புகழுக்கும் உறைவிடமாய் இருந்த கையினால் அடித்தான்; எற்றலோடும்: அடித்த மாத்திரத்தில்; திசை திறந்து அண்டம் கீறி: நாலா திசையும் அகன்று இடம் கொடுக்க, அதாவது வான் முகடு பிளந்தது என்று சொல்லும்படியாக; சிரித்தது வெங்கட்சீயம்: சிவந்த கண்ணோடு கூடிய நரசிம்ம மூர்த்தி காட்சி அளித்துவிட்டார்—வக்கிர தந்தங்கள் எல்லாம் தெரியும்படியாக இருந்தது. அதைச் சிரிப்பு என்று உபசரித்திருக்கிறது.]

கடவுளுடைய சக்தி பூமியோடு நிற்பதல்ல. பேரண்டம் முழுவதையும் அடக்கிக் கொண்டும் ஆட்டிக் கொண்டும் இருக்கிறது. இந்த உண்மை வெளியாயிற்று என்பதைக் காட்ட வந்த உருவகம் (அடையாளம்) நரசிம்ம மூர்த்தி.

வான் முகடு முழுதும் நான்கு திசைகளிலும் தொட்டு நின்ற வண்ணமாய் இருந்தது நரசிம்மத்தின் முகம், கண், பல், வாய் எல்லாம்.

அற்புதமான முறையில் பரம்பொருளின் வியாபகத்தையும் சக்தியையும் எடுத்துச் சொல்லுகிறது செய்யுள்.

# தர்ம சங்கடம்

விஜயம்

அந்த ஊரில் எத்தனையோ டாக்டர்கள் இருந்தார்கள். மோகன்லால் அநேகமாக எல்லா டாக்டர்களிடமும் போய்ப் பார்த்து விட்டான். ஒரு டாக்டராவது அவன் வியாதி என்னவென்பதைக் கண்டு பிடித்து மருந்து தரவேண்டுமே, கிடையாது.

மோகன்லாலுக்கு வரவர மனக் கவலை அதிகமாகிக் கொண்டே வந்தது; உற்சாகம் குறைய ஆரம்பித்தது. வேலைக்குப் போவதில் கூட அவனுக்கு இப்போதெல்லாம் அவ்வளவாகச் சிரத்தை கிடையாது. அவன் வேலை பார்த்து வந்த கம்பெனி மானேஜர் அவனிடம் அளவு கடந்த அன்பு வைத்திருந்தாராகையினால், அவன் வியாதி நீங்கிச் சந்தோஷமாயிருக்கவேண்டும் என்பதற்காக விசேஷ சிரத்தையுடன் கைதேர்ந்த டாக்டர்களை அழைத்து அவன் உடம்பைப் பரிசோதித்துப் பார்க்கச் சொன்னார்.

"மிஸ்டர், உங்கள் உடம்பில் ஒரு கொடிய நோய் தயாராகிறது. ஒரு டானிக் எழுதித் தருகிறேன். வாங்கிச் சாப்பிடுங்கள். நோய் மிகக் கொடியதுதான். ஆனால் கவலை வேண்டாம். நான் சொல்லுகிறபடி மருந்து சாப்பிடுங்கள். நல்ல புஷ்டியான ஆகாரம் சாப்பிடுங்கள்!" என்று அந்த ஊர்ப் பெரிய டாக்டர் சொன்னார்.

மோகன்லால் அதற்கு முன்னாலேயே எத்தனையோ டானிக் வாங்கிச் சாப்பிட்டிருக்கிறான். ஒவ்வொரு டாக்டர் சொன்ன மருந்தையும் வாங்கிச் சாப்பிட்டதனால் அவன் அறை முழுவதும் வித விதமான வர்ண சீசாக்களால் நிரப்பி வைக்கப்பட்டிருந்தது. இதனால் ரொம்பப் பேர் அவனையே டாக்டர் என்று நினைத்துக் கொண்டு வந்து பார்க்க ஆரம்பித்தனர். மோகன்லாலுக்கு இதையெல்லாம் நினைக்கும்போது சிரிப்புத் தாங்கமுடியாமல் வந்தது.

ஒரு நாள் "மோகன், இந்த ஊருக்குப் புதிதாக ஒரு டாக்டர் வந்திருக்கிறார். வந்து ஒரு மாதம்தான் ஆகிறது. அதற்குள் அவருக்கு நல்ல பெயர் கிடைத்துவிட்டது. அதோடு அவர் நல்ல கைராசிக்காரராம்; அவரிடம் வேண்டுமானால் போய்விட்டு வரலாம், வாயேன்!" என்று மோகன்லாலின் சிநேகிதன் கூப்பிட்டான்.

"எனக்கு வந்திருக்கும் வியாதியைக் குணப்படுத்த எந்த டாக்டராலும் முடியாது. வயிறு குலுங்கச் சிரித்து ஆனந்தத்தில் என்னையே மறந்து உற்சாகமாக ஒரு நாளாவது இருக்கமாட்டேனா என்று எனக்கு ஓர் ஏக்கமாயிருக்கிறது. இதற்கு எந்த டாக்டரால் என்ன செய்ய முடியும்? ஏற்கெனவே டானிக் சாப்பிட்டுச் சாப்பிட்டு, உடம்பு முழுவதும் டானிக் மயமாய்ப் போய்விட்டது. இந்தப் புதிய டாக்டரிடம் போனால் இவன் வேறு டானிக் எழுதித் தருவான். அதையும் சாப்பிட வேண்டும். வேண்டாம், அப்பா! இனிமேல் மருந்தும் வேண்டாம், டாக்டரும் வேண்டாம்!" என்று ரொம்ப அலுப்புடன் மோகன்லால் சொன்னபோது அவன் நண்பனுக்கு அவனிடம் மிகவும் இரக்கமுண்டாகி விட்டது.

"மோகன், நீ இப்படிப் பேசுவது சரியல்ல. புதிய டாக்டரை ஊரெல்லாம் கொண்டாடுகிறார்கள். நாமும்தான் போய்ப் பார்த்து





ஹாஸ்டல் வார்டன் :—ஹாஸ்டலில் உம்முடைய சமையல் சுத்த மோசமா யிருக்கிறதாமே! இப்படிச் செய்தால் நீர் ஹாஸ்டலை விட்டுப் போகவேண்டியதுதான்!

சமையற்காரர் :—இந்த 'ஸ்டூடண்ட்ஸ்'கள்தானே உங்களிடம் அப்படி வந்து புகார் சொன்னார்கள்! அதை நீங்கள் நம்ப வேண்டாம், ஸார்!

வார்டன் :—ஏன் நம்பக்கூடாது?

சமையற்காரர் :— வகுப்பிலே நீங்கள் சொல்லிக் கொடுப்பதெல்லாம் சுத்த மோசம் என்று என்னிடம் இதே பையன்கள் புகார் சொல்லுகிறார்கள்!

---

விட்டு வருவோமே!" என்று நண்பன் விடாப்பிடியாக நச்சரித்தான்.

மோகன் அரைமனசுடன் அவனோடு புதிய டாக்டர் வீட்டுக்குப் போனான்.

டாக்டர் வீட்டில் நிறைய நோயாளிகள் வந்து உட்கார்ந்திருந்தனர். அரை மணி நேரம் காத்திருந்து அவர்களெல்லாம் போன பின்பு, மோகன்லாலும் அவன் நண்பனும் சாவதானமாக டாக்டரிடம் போனார்கள்.

டாக்டர் மோகன்லாலின் கையைப் பிடித்துப் பார்த்து, நிதானமாகப் பரிசோதித்தார்.

"மிஸ்டர், உங்கள் உடம்புக்கு ஒன்றுமில்லை. குண்டுக் கல் மாதிரி இருக்கிறீர்கள்! மனசைத்தான் அனாவசியமாய் அலட்டிக் கொண்டிருக்கிறீர்கள். மனசு உற்சாகமாக இருந்தால் எல்லாம் சரியாய்ப் போய்விடும். அந்த மனசு உற்சாகம் அடைவதற்கு நான் சொல்லுகிறபடி கேளுங்கள். இந்த ஊருக்குப் புதிதாக ஒரு சர்க்கஸ் கம்பெனி வந்திருக்கிறதே, அதைப் போய்ப் பார்த்தீர்களா?" என்று கேட்டார் டாக்டர்.

மோகன் வியப்புடன், "இல்லை, அங்கே என்ன விசேஷம்?" என்று கேட்டான்.

"சர்க்கஸை ஒரு தடவை கூடப் பார்க்கவில்லையா? நீங்கள் ரொம்ப அதிசயப் பிறவிதான்! அங்கே ஒரு கோமாளி ரொம்ப ஹாஸ்யமாக நடிக்கிறான். எப்படிப்பட்ட சிடுமூஞ்சி அதைப் பார்த்தாலும் சிரித்தே தீருவான். முதலில் நீங்கள் சர்க்கஸுக்குப் போங்கள். அந்தச் சர்க்கஸ் கோமாளிதான் உங்கள் மனதைச் சரிப்படுத்த வேண்டும். மருந்தினால் ஒன்றும் முடியாது, அப்பா! இப்போது அவனை நினைத்தால்கூட எனக்குச் சிரிப்புத் தாங்கவில்லை. ஹஹ், ஹஹ், ஹா!" என்று டாக்டர் வாய் விட்டுச் சிரித்தார்.

மோகன்லால் பிரமை பிடித்தவன் மாதிரி நின்றான். அவனுடைய நண்பன் முகத்திலும் ஆச்சரியக் குறி தோன்றியது.

"என்ன ஸார்! நான் சொல்லுவதைக் கேட்டே பிரமிக்கிறீர்களே! அந்தக் கோமாளியின் நடிப்பை நேரில் போய்ப் பார்த்தால் என்ன செய்வீர்களோ!" என்று கூறிவிட்டு டாக்டர் மீண்டும் 'ஹஹ், ஹஹ், ஹா!" என்று சிரித்தார்.

அவ்வளவுதான்; மோகனும் டாக்டருடன் சேர்ந்து சிரிக்க ஆரம்பித்து விட்டான்.

டாக்டருக்கு ஒன்றும் புரியவில்லை. "நீங்கள் ஏன் சிரிக்கிறீர்கள்?" என்று கேட்டார்.

"நான்தானே அந்தச் சர்க்கஸ் கோமாளி!" என்றான் மோகன்லால்.

டாக்டருக்குத் தர்மசங்கடமாகப் போய்விட்டது. அவருக்குச் சிரிப்பதா, அழுவதா என்று தெரியவில்லை!

# காலக்ஷேபம்

"கறுப்புப் பூனை குறுக்கே போனால் நல்லதா, கெட்டதா?"

"அது நீ மனுஷனா, சுண்டெலியா என்பதைப் பொறுத்திருக்கிறது!"

★

மகன் :—அப்பா, கடவுள் ரொம்பப் புத்திசாலி!

அப்பா :—ஏன்?

மகன் :—மூக்குக் கண்ணாடி கண்டு பிடிப்பதற்குப் பல ஆயிரம் வருஷங்களுக்கு முன்னாலேயே, அதை மாட்டக் காதைக் கண்டு பிடித்து விட்டார் அல்லவா?

★

மாஜிஸ்ட்ரேட் :—இந்தக் கைதி என்ன குற்றம் செய்தான்?

கான்ஸ்டபிள் :—அவன் நான் 'டூட்டி'யாக இருந்த இடத்தில் மத்தியானம் முழுவதும் ஒரு வேலையும் இல்லாமல் அலைந்துகொண்டிருந்தான்.

மாஜிஸ்ட்ரேட் :— கான்ஸ்டபிள் மாதிரி பொய்யாக நடித்ததற்காக ஐந்து ரூபாய் அபராதம்!

★

வந்தவர் :—நான் இந்தக் கடிகாரத்தை ஒன்றுமே செய்யவில்லை. இதைக் கீழே போட்டுவிட்டதுதான் தப்பு......

ரிப்பேர் செய்பவர் :— இதைக் கீழே போட்டதில் பிசகில்லை; திருப்பி எடுத்துக் கொண்டீரே, அதுதான் தப்பு!

ஒரு புஸ்தகக் கடையிலிருந்து புஸ்தகம் வரவழைத்த ஒருவருக்குப் பணத்தை அனுப்பச் சொல்லிக் கடிதம் வந்தது. அவர் அந்தக் கடிதத்துக்குப் பின்வருமாறு பதில் எழுதினார் :—

"ஐயா, நான் உம்மைப் புஸ்தகம் அனுப்பும்படி எழுதவில்லை. அப்படி அனுப்பும்படி எழுதியிருந்தாலும் நீங்கள் அனுப்பவில்லை. அப்படியே நீங்கள் அனுப்பியிருந்தாலும் அது எனக்கு வந்து சேரவில்லை. வந்து சேர்ந்திருந்தால் நான் பணம் அனுப்பிவிட்டேன். பணம் அனுப்பாமல் இருந்தால் அனுப்பப் போவதில்லை!"

★

"நீ எப்போதாவது உன் மனைவியோடு அபிப்பிராய பேதப்பட்டதுண்டா?"

"ஆகா! எத்தனையோ தடவை! ஆனால் அது அவளுக்குத் தெரியாது!"

★

ஊரிலிருந்து வந்தவர் :—நாயுடு உங்களை ரொம்பக் கேட்டதாகச் சொல்லச் சொன்னார்.

அவர் (முகத்தைச் சுளித்துக்கொண்டு) :- சுத்த அற்பன்! எப்போதோ ஒரு பத்து ரூபாய் கடன்கொடுத்தான்; அதைச் சும்மா கேட்டுக்கொண்டே இருக்கிறான்!

★

"நேற்றோடு என் சினேகிதர்கள் எல்லாரும் என்னை விட்டுப் போய்விட்டார்கள்!"

"ஏன்?"

"நான் என்னுடைய மோட்டார்காரை விற்றுவிட்டதினால்தான்!"



"ஸார்! அடிபட்ட ஆனை தாண்டாச் சக்தி விக்னேசுவர சுந்தர விநாயக முதலித் தெரு எது ஸார்?"
"என்னங்க?"

"அடிபட்ட ஆனை தாண்டாச் சக்தி விக்னேசுவர சுந்தர விநாயக முதலித் தெரு எதுங்கன்னு கேட்கிறேன்!"
"என்ன சொல்றீங்க!"

"ஒண்ணும் சொல்லலீங்க! நான் போய் வரேனுங்க! வேறு யாரையாவது கேட்டுத் தெரிஞ்சுக்கப் பார்க்கிறேனுங்க!"

# மேடைத் தமிழ்



பேச்சு என்பது ஒரு கலை; அருமையான கலை. உலகில் பல நாடுகள் பேச்சுக் கலையைப் பெரிதும் போற்றி வளர்த்திருக்கின்றன.

தமிழ் நாட்டில் இப்போது பேச்சுக்குப் பஞ்சம் இல்லை. எங்கே பார்த்தாலும் ஒரே பேச்சாக இருக்கிறது. பேச்சு வளர்ந்து விட்டது; ஆனால் பேச்சுக் கலை நன்கு வளர்ந்திருக்கிறது என்று சொல்ல முடியாது.

தமிழ் நாட்டிலும் விரைவில் பேச்சுக் கலை வளர்ந்துவிடு மென்பதற்கு இப்போது ஒரு அறிகுறி காணப்படுகிறது.

• • •

நாளது 1949-ம் வருஷம் ஏப்ரல் மாதம் 10-ம் தேதி சென்னை மெமோரியல் மண்டபத்தில் ஒரு இலக்கிய அரங்கேற்றம் நடந்தது. பண்டிதர்களும் பேராசிரியர்களும் குழுமியிருந்த அந்த மகாசபையைப் பார்த்தபோது பண்டைக்கால ஞாபகம் நினைவுக்கு வந்தது.

முத்தமிழை வளர்த்த மூவேந்தர்கள் காலத்தில் யாராவது ஒரு கவி புதிதாக ஒரு காவியத்தை இயற்றினால் அதற்கு அரங்கேற்றம் நடக்கும். பண்டிதர்களும் கவிஞர்களும் கூடிய ஒரு மாபெரும் சபை அந்த நூலை ஆராய்ந்து அது சிறப்புடையதாக இருக்குமானால் அதைப் பாராட்டிப் புகழும்; அதை எழுதிய ஆசிரியரைப் போற்றும். அவ்விதம் அரங்கேற்றப்பட்ட நூலுக்குத் தேச முழுவதும் ஒரு தனி மதிப்பு இருக்கும்.

ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்குப் பின்னர் அன்றைய தினம் மெமோரியல் மண்டபத்தில் அத்தனை பேராலும் பாராட்டப்பட்டு அரங்கேற்றம் செய்யப்பட்ட நூலின் பெயர் மேடைத் தமிழ் என்பதாகும்.

மூவேந்தர்கள் காலத்திலிருந்து இன்று வரையில், தமிழ் இயல், இசை, நாடகம் என்னும் முத்தமிழாக மட்டுமே இருந்து வந்தது. நான்காவது தமிழாகிய மேடைத் தமிழுக்குத் தனிச் சிறப்பு அளித்து அரங்கேற்றிய பெருமை தோழர் தெய்வசிகாமணி ஆச்சாரியார் அவர்களுக்கு உரியது.

மேடைத்தமிழ் இரண்டு பகுதிகளாகப் பிரிக்கப் பட்டிருக்கிறது. முதல் பகுதி பேச்சு இலக்கியத்தைப் பற்றியும் இரண்டாவது பகுதி பேச்சுத் தத்துவத்தைப் பற்றியும் விளக்குகிறது. பேச்சை ஆரம்பிப்பது எப்படி? முடிப்பது எப்படி? வாதம் செய்வது எப்படி?—என்னும் விஷயங்களைப் பற்றி ஆசிரியர் பல மேற்கோள்களை எடுத்துக் காட்டி அழகாக விளக்குவதைப் படிக்கும்போது, நாம் ஒரு புத்தகத்தைப் படிப்பதாகவே தோன்றவில்லை. ஆசிரியரே மேடைமேல் ஏறிப் பேச்சுத் தமிழைப் பற்றி முழக்குவதைப்போல் இருக்கிறது.

புத்தகத்தின் கடைசியில், உலகப் புகழ் பெற்ற சில பேச்சாளர்களின் பேச்சுக்கள் மொழிபெயர்த்துக் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இது மேடைப் பேச்சாளர்களாக விரும்புவோருக்கு மிக்க உதவியாயிருக்கும்.

திரு. வி. க. அவர்கள் இந்நூலுக்கு வழங்கியிருக்கும் அணிந்துரையில், "இற்றை ஞான்று 'மேடைத் தமிழ்' என்றொரு நூல் உருக் கொண்டுள்ளது. இம்முடி மிலைந்த ஒரு நூலை இதுகாறும் நீங்கள் கண்டதுண்டா? இது புது முறையில் சமைந்த ஒரு நூல்!" என்று பாராட்டிக் கூறுவது ஒன்றே இப்புத்தகத்தின் சிறப்பைப் பகரப் போதியதாகும்.



தோழர் ஆச்சாரியார்

திரு தெய்வசிகாமணி ஆச்சாரியார் பேச்சுத் தமிழுக்கு ஆற்றியிருக்கும் தொண்டைப் பாராட்டுகிறோம்.

புத்தகத்தின் விலை ரூ. 10. கிடைக்குமிடம்: ஸ்ரீ டி. எம். தெய்வசிகாமணி ஆச்சாரியார், 29-A, திருவேங்கட முதலித் தெரு, பார்க் டவுன், சென்னை.

# மாஜி கைதி

அக்ஷயம்

காளியின் பெண்சாதி ஏழெட்டு நாட்களாகப் படுத்த படுக்கையாக இருந்தாள். வைத்தியர் அந்த ஏழெட்டு நாட்களும் அன்ன ஆகாரமின்றி அவளைப் பட்டினி போட்டுவிட்டார். மறு நாள் பூண்டு வாங்கி வந்து ரசம் வைத்து ஆகாரம் கொடுக்குமாறு சொல்லியிருந்தார். அந்தக் குப்பத்துக்குப் பக்கத்தில் கடைகள் கிடையாது. இரண்டு மைல் தூரத்திலுள்ள எரவாஞ்சேரி கடைத் தெருவுக்குப் போனால்தான் எந்தச் சாமான்களும் வாங்க முடியும். அன்று செய்த மாட்டுக் கொம்புச் சீப்பை விற்றுக் கிடைத்த ஓரணாக் காசை எடுத்துக்கொண்டு, காளி பூண்டு வாங்கி வருவதற்காக எரவாஞ்சேரிக் கடைத்தெருவை நோக்கிப் புறப்பட்டான்.

கடைத் தெருவுக்குள் நுழைந்ததும் முதலாவதாக அவனுடைய பார்வை ஒரு மிட்டாய்க் கடை மீது விழுந்தது. உடனே அவனுக்குத் தன் ஏழெட்டு வயதுப் பெண் மருதாயியின் நினைவு வந்தது. அவன் அந்தக் கடைத் தெருவுக்கு வந்து போகும்போதெல்லாம், மருதாயிக்கு ஏதாவது தின்பண்டம் வாங்கிச் செல்லாமல் இருந்ததில்லை. ஆகவே அவன் மிட்டாய்க் கடைக்குச் சென்று அரையணாவுக்குச் 'சுகியன்' வாங்கிக் கொண்டான். பிறகு மருந்துக் கடைக்குச் சென்று பூண்டை வாங்கிக் கொண்டு வீட்டை நோக்கிப் புறப்பட்டான்.

அவன் வீட்டுக்குப் புறப்படும்பொழுது பொழுது சாய்ந்துவிட்டது. கொஞ்ச தூரம் வந்ததும் அவன் ஒரு மோட்டார் கார் சாலையோரத்தில் நிற்பதைக் கண்டான். அதில் யாரோ ஒரு தனவந்தர் உட்கார்ந்திருந்தார். திடீரென்று ஏதோ மிஷின் கோளாறினால் கார் நின்றுவிட்டது. டிரைவர் அதை 'ஸ்டார்ட்' செய்ய அரை மணி நேரமாக ஆனப்பட்ட பாடு பட்டுப்பார்த்தான். ஆனால் அது தன் சண்டித்தனத்தை விடுவதாயில்லை. ஆகவே கடைசியில் டிரைவர், "எசமான், பிரேக்கைப் பிடித்துக் கொள்ளுங்கள். நான் பின்னாலிருந்து தள்ளுகிறேன். புறப்பட்டுவிடும்" என்றான்.



அந்தத் தனவந்தர் அப்படியே எரித்து விடுபவர்போல டிரைவரை ஒரு முறை விழித்துப் பார்த்தார். பிறகு வேறு வழியில்லை என்று எழுந்திருந்த அவருடைய பார்வை சாலையின் எதிர்ப்புறத்தில் வேடிக்கை பார்த்தவண்ணம் நின்றுகொண்டிருந்த காளியின்மீது விழுந்தது. காளி இதுவரை இவ்வளவு சமீபத்தில் நின்றுகொண்டு காரைப் பார்த்ததில்லை. ஆகவே அவன் வியப்பு மிகுதியில் மோட்டாரையும் மோட்டாரில் உட்கார்ந்திருந்த தனவந்தரையும் அதை 'ஸ்டார்ட்' செய்யப் பிரும்மப்பிரயத்தனம் செய்துகொண்டிருந்த டிரைவரையும் மாறி மாறிப் பார்த்துக் கொண்டிருந்தான். தனவந்தர் அவன் பக்கம் கையை நீட்டி அழைத்தார். அதைப் பார்த்த காளி ஓரடி முன் எடுத்து வைத்தான். அதற்குள் தனவந்தர் தன் டிரைவரைப் பார்த்து, "அந்த ஆளைக் கூப்பிட்டுத் தள்ளச் சொல்" என்று சொல்லிவிட்டுத் தன் இடத்திலேயே அமர்ந்து விட்டார்.

டிரைவர் 'ஹாண்டிலை' எடுத்து வண்டிக்குள் வைத்துவிட்டு, தனவந்தரின் கட்டளைப்படி காளியைக் கூப்பிட்டுத் தள்ளச் சொன்னான். காளி டிரைவரின் சொல்லுக்குத் தடை சொல்லவில்லை. அந்த மோட்டார் மீது—நடு வழியில் இம்மாதிரி 'மக்கர்' செய்யும் அந்த இரும்பு யந்திரத்தின்மீது—தனது பலத்தைப் பிரயோகித்துப் பரீக்ஷித்துப் பார்த்து யார் பலசாலி என்பதைப் பார்த்து விடவேண்டும் என்று அவனுடைய காட்டுப்புறத்து உள்ளம் துடியாய்த் துடித்தது. ஆகவே அவன் தன் கையில் இருந்த பொட்டணங்களைச் சாலையோரத்தில் வைத்து விட்டு, மோட்டாரைப் பின்னாலிருந்து பிடித்துத் தள்ளலானான். மோட்டார் நகரத் தொடங்கியது. அதைக் கண்டதும் அவனுக்கு மகிழ்ச்சி தாங்கவில்லை. டிரைவர், "சபாஷ்! இன்னும் கொஞ்சம் தள்ளு!" என்று உற்சாக மூட்டினான். காளி உணர்ச்சிவேகத்தில் இன்னும் வேகமாகத் தள்ளினான். மோட்டாரும் வேகமாக நகர்ந்தது. கொஞ்ச தூரம் போனதும் பாதை சரிவாயிருந்தது. மோட்டார் தானாக நகரத் தொடங்கவே காளியும் அதன் வேகத்துக்குத் தகு



தாற்போல ஓடலானான். பட் பட் பட்! அடுத்த கணம் மோட்டார் புறப்பட்டு விட்டது. தன்னுடைய சிறிது நேர பலவீனத்தை எண்ணி அதற்கு வெட்கம்தான் ஏற்பட்டதோ அல்லது இந்த மனுஷ்ய சக்தியிடமிருந்து தப்பினால் போதும் என்று தோன்றிற்றோ, தெரியவில்லை. காளியின் கைப்பிடியினின்று தன்னை விடுவித்துக் கொண்டு வெகு வேகமாக நகர்ந்துவிட்டது.

மறுகணம் காளி நிலை குப்புறச் சாலையின் 'ஆச்சக் குழி'யில் விழுந்து விட்டான். மோட்டார் 'கடகட' வென்று அட்டகாசம் புரிந்துகொண்டு, அவன் விழுந்ததைக் கண்டு கைகொட்டி நகைப்பதுபோல, சாலைப் புழுதியை அவன் மீது வாரி இறைத்துவிட்டு வெகு வேகமாக ஓடி மறைந்துவிட்டது. குப்புற விழுந்த காளிக்குச் சுயப் பிரக்ஞை வரச் சிறிது நேரம் ஆயிற்று. பிரக்ஞை வந்த அவன் தன் தலையைத் தடவி விட்டுக் கொண்டான். கை நனைந்தது. அது அவனுக்கு வியப்பை அளித்தது. அவன் மறுபடியும் கையை வைத்துப் பார்த்தான். நெற்றிப் பொட்டு உடைந்திருந்தது. அதிலிருந்து ரத்தம் வழிந்தோடி வந்து கொண்டிருந்தது. அவன் தரையில் கையை ஊன்றிக்கொண்டு எழுந்திருக்க முயற்சித்தான். அவன் உடல் 'வெட வெட' வென்று நடுக்கத் தொடங்கியது. முழங்காலில் வேறு வலி தோன்றியது. அவன் எப்படியோ எழுந்து உட்கார்ந்து, இடது கையினால் நெற்றிப் பொட்டை அழுத்திப் பிடித்துக் கொண்டான். அப்படியும் இரத்தம் கசிவது நிற்கவில்லை. சிறிது நேரத்துக்கெல்லாம் அவன் உடல் சோர்ந்து சாலையோரத்தில் மறுபடியும் படுத்து விட்டான்.

## 2

வயல் வெளியின் குளிர்ந்த காற்றுப் பட்டுக் காளி கண் விழித்தான். அப்பொழுது கிழக்கு வெளுக்க ஆரம்பித்து விட்டது. இரவில் நன்றாக அயர்ந்து தூங்கி விட்டதால் சோர்வு சற்றுக் குறைந்திருந்தது. அவன் மெதுவாக எழுந்து உட்கார்ந்தான். தன் பெண்சாதிக்காகப் பூண்டும் பெண்ணுக்காகத் தின்பண்டமும் வாங்கி வந்தது நினைவுக்கு வரவே, வைத்த இடத்தை நோக்கினான். அங்கே அவற்றைக் காணவில்லை. 'இப்படியே திரும்பவும் கடைத் தெருவுக்குப் போய் வந்தால் என்ன?' என்று தோன்றிற்று அவனுக்கு. ஆனால் கையில் காசு வேண்டாமா, வேண்டியதை வாங்குவதற்கு? ஆகவே அவன் மெதுவாக எழுந்து குப்பத்தை நோக்கி நடந்தான். முழங்கால் வலி அதிகமாய் இருந்தது. ஆகவே வீடு போய்ச் சேரும் பொழுது, வெய்யில் புறப்பட்டுவிட்டது. குடிசைக்கு வெளியே நின்றுகொண்டிருந்த மருதாயி, வெகு தொலைவிலேயே அவன் வருவதைக் கண்டுவிட்டாள். ஓடோடி வந்து அவன் கால்களைக் கட்டிக்கொண்டாள். "என் அப்பா, நேத்து ராவைக்கு எங்கே தங்கிவிட்டே?" என்று கொஞ்சலாகக் கேட்டாள்.

காளி அவளுடைய தலையைக் கோதி விட்டுக் கொண்டே, "உனக்காகப் பணியாரம் வாங்கிவரப் போயிருந்தேன், அம்மா!" என்றான் அன்பாக.

"எங்கே அப்பா, பணியாரம்?" என்று கேட்டாள் மருதாயி.

"இன்னும் வாங்கி வரலே, அம்மா! இதோ போய் வாங்கியாரேன்" என்று சொல்லிக்கொண்டே காளி குடிசைக்குள் நுழைந்தான். காலடிச் சத்தத்தைக் கேட்டதும் அவன் பெண்சாதி, "என்ன மனுசன் நீ!" என்று சலித்துக்கொண்டாள்.

"ஏன்?"

"நேத்து ராவைக்கு எங்கே போயிட்டே?"

"அதை ஏன் கேக்கிறே, போ!"

"உன்னை யாராச்சும் பிடிச்சுக்கிட்டாங்களா, என்ன?"

"இல்லே!"

"அடே, இதென்ன துணியிலே! ரத்தக் கறை பட்டிருக்குப் போலிருக்குதே!" என்று பதறிப்போய்க் கேட்டாள் அவள்.

"ஒண்ணுமில்லே! இதனாலே தான் நேத்து ராவைக்கு வரமுடியாமல் போயிடுச்சு! கால் தடுக்கிக் கீழே விழுந்துட்டேன்" என்றான் காளி.

"விழுந்துட்டியா? அட ராமா! எவ்வளவு ஆழமாக் காயம் பட்டிருக்குது!

ஆமாம், திரும்புகாலையிலே கல்லா இருட்டிப் போயிடுச்சோ ?''

" ஆமாம், கொஞ்சம் மஞ்சள், சுண்ணாம்பு இருக்குதா ?''

" மஞ்சள் இருக்குது. ஆனால் சுண்ணாம்பு இல்லையே ! தலையாரி வீட்டிலே இருக்கும். போய் வாங்கி வாரேன் '' என்றாள்.

3

காளி காயத்துக்கு மஞ்சள் சுண்ணாம்பு போட்டுக்கொண்டு வீட்டிலிருந்த பழைய சோற்றைத் தின்று விட்டுத் தன் பையை எடுத்துக் கொண்டு சிப்புச் செய்வதற்காக மாந்த நிழலுக்குப் புறப்பட்டான். அதே சமயம் தலையாரி மாணிக்கம் அங்கே வந்தான். " வாங்க வாங்க ! வெத்திலை போடறிங்களா ?'' என்று அன்புடன் வரவேற்றான் காளி.

மாணிக்கம் தன் பித்தளைப் பூண் போட்ட தடியைச் சுழற்றிக் கொண்டு, " வெத்திலை போட்டுக் கொள்வதெல்லாம் அப்புறம் ஆகட்டும் ! முதலில் என்னோடு நட, சொல்லுகிறேன் !'' என்றான் அதிகார மிடுக்குடன்.

" எங்கே கூப்பிடுறிங்க ?'' என்று பயந்தவாறு கேட்டான் காளி.

" எங்கே கூப்பிடுவேன், . நான் ! நட போலீஸ் ஸ்டேஷனுக்கு !''

" போலீசு டேசனுக்கா ? எதுக்குங்க ?''

" எனக்கு என்ன தெரியும் ? இன்ஸ்பெக்டர் ஐயா உன்னைக் கையோடு கூப்பிட்டுக் கொண்டு வரச் சொன்னார் !''

" இனிசுபெக்டர் ஐயா என்னைக் கூப்பிடக் காரணம் என்னங்க ? சொல்லப்படாதுங்களா ?'' என்று குரலைத் தாழ்த்திக் கேட்டான் காளி.

மாணிக்கம் சிறி விழுந்தான். " நான் என்ன ஜோஸ்யனா ? எனக்கு என்ன அப்பா தெரியும் ? அவரையே போய்க் கேளு '' என்றான்.

காளி வாய் திறவாமல் அவன் பின்னாலேயே நடந்தான்.

அவன் ஸ்டேஷனை அடைந்த பொழுது இன்ஸ்பெக்டர் நாற்காலியில் அமர்ந்து சிகரெட் பிடித்துக் கொண்டிருந்தார். எதிரே மூங்கில்குடி பெரிய பண்ணை வீட்டுக் கணக்குப் பிள்ளை உட்கார்ந்திருந்தார். அவருக்குப் பக்கத்திலேயே அந்த ஊர்த் தலையாரியும் நின்றுகொண்டிருந்தான்.

காளி இன்ஸ்பெக்டரைப் பார்த்ததும் விழுந்து கும்பிட்டுவிட்டு ஒரு புறமாக ஒதுங்கி நின்றான்.

" இவன் எங்கே அகப்பட்டான் ?'' என்று இன்ஸ்பெக்டர் மாணிக்கத்தைப் பார்த்துக் கேட்டார்.

" வீட்டில்தான் இருந்தான், எசமான் !'' என்றான் மாணிக்கம்.

" ஏன் காளி, நேற்று இரவு எங்கே போயிருந்தாய் ?'' என்று கேட்டார் இன்ஸ்பெக்டர்.

" எரவாஞ்சேரி கடைத் தெருவுக்குப் போயிருந்தேனுங்க !''

" எதற்காக ?''

" பூண்டு வாங்கியாரப் போயிருந்தேங்க ?''

" அங்கிருந்து எப்பொழுது திரும்பினாய் ?''

" இன்னிக்கிக் காலையிலேதான் !''

" இந்தக் காயம் எங்கே பட்டது ?''

" என்னத்தைச் சொல்லுவேனுங்க ? நான் பண்ணின பாவம்......''



மனைவி :—ஏன் இப்படி என்னைக் கரிச்சுக் கொட்டுகிறீர்கள் ? நான் உங்களை என்ன பண்ணினேன் ?

கணவர் :—நான் ஒன்றும் கரிச்சுக் கொட்டவில்லை. நீ பண்ணிய குழம்பு தான் உப்புக் கரிக்கிறது !



நண்பர் :—டாக்டர் ஸார், நீங்கள் "சனிசுவரன்" பத்திரிகையில் எழுதியிருந்த ஹாஸ்யக் கதையைப் படித்து என்னுடைய வயிறு புண்ணாய்ப் போய்விட்டது.

டாக்டர் (ஞாபக மறதியாக) :— கொஞ்சம் இருங்கள். ஒரு மிக்ஸ்சர் தருகிறேன். அதைச் சாப்பிட்டால் சரியாய்ப் போய்விடும்!

---

"போக்கிரிப் பயலே! என்னிடமா உன் வேலையைக் காட்டுகிறாய்?" என்று பல்லை 'நெற நெற' வென்று கடித்தார் ஸப் இன்ஸ்பெக்டர்.

"எசமான்!......"

அதற்குமேல் காளியினால் பேச முடியவில்லை.

"இந்த ஆள் நேற்று ராத்திரி ஒன்பது மணிக்கு மூங்கில்குடி பெரியபண்ணை வீட்டுப் பக்கத்திலே நீ சுற்றிக் கொண்டிருந்ததைப் பார்த்தேன் என்று சொல்லுகிறாரே!"

"இல்லீங்க எசமான்! நேத்து நான் அந்த ஊருப் பக்கமே போகலீங்க. சாலையிலே வுளுந்து கெடந்தேன்" என்று நடுங்கிய குரலில் பதில் அளித்தான் காளி.

"டேய்! எதற்கடா முழுப் பூசணிக் காயைச் சோற்றில் மறைக்கிறாய்? பெரிய பண்ணை வீட்டிலே, நீ திருடப் போகையிலே இவர் உன்னைப் பார்த்தாராமே!" என்றார் இன்ஸ்பெக்டர்.

காளி பயந்துபோய், இன்ஸ்பெக்டரின் காலடிகளில் விழுந்து, "எசமான்! ஏழையை நீங்கதான் காப்பாத்தணுமுங்கோ. ஆண்டவன் மீது ஆணை வைத்துச் சொல்லுகிறேன். நான் நேத்து அந்த ஊருப் பக்கமே போகவில்லை. எரவாஞ்சேரிக்குப் போயிருந்தேனுங்க. திரும்பி வரும்போது......"

"டேய்! வாயை மூடு. புளுகுண்ணிப் பயலே! உன் சேதி தெரியுமடா? இந்தக் காயம் எங்கேயடா பட்டது? பெட்டியைத் தூக்கிக் கொண்டு சுவர் ஏறிக் குதித்த பொழுது கீழே விழுந்து விட்டதனால் தானே? எல்லாவற்றையும் இந்த நிலையாளி தன் கண்ணாலேயே பார்த்ததாகச் சொல்லுகிறார். இவர் என்ன, பொய்யா சொல்லுகிறார்?" என்றார் இன்ஸ்பெக்டர்.

காளிக்கு நாத் தழதழத்து விட்டது. "எசமான், நான் மோட்டார் தள்ளினேனுங்க. அப்போ இந்தக் காயம் பட்டுடிச்சுங்க" என்றான்.

இன்ஸ்பெக்டர் 'கடகட' வென்று பேய்ச் சிரிப்புச் சிரித்தார்.

* * *

காளியின் மீது திருட முயற்சித்ததாகக் குற்றம் சாட்டப்பட்டு ஆறுமாதம் சிறைத் தண்டனை விதிக்கப்பட்டது. ஊரில் எல்லாரும் அவனைத் திருடன் என்றே கருதினார்கள். அவனுடைய மனைவி மட்டுந்தான் அவன் திருடவில்லை என்றும், அநியாயமாகச் சிறைச்சாலைக்கு அனுப்பப்பட்டதாகவும் சொல்லிவந்தாள்.

காளி சிறைவாசத்தை முடித்துவிட்டு வெளியே வந்தான். திருட்டுப் பட்டம் பெற்ற அவனுக்கு வேலை கிடைப்பது கஷ்டமாயிருந்தது. இரண்டு மாதத்துக்கெல்லாம் அவனை மறுபடியும் போலீஸார் வந்து அழைத்துப்போனார்கள். அவனுடைய மனைவியும் மகளும் கதறினார்கள்.

காளியை அழைத்துப்போன போலீஸார் லாக்-அப்பில் இருந்த ஒரு மனிதனைக் காட்டி "இவனைத் தெரியுமா?" என்று கேட்டார்கள். "தெரியும்! இவருடைய மோட்டாரைத்தான் அன்றைக்கு நான் தள்ளிவிட்டேன்!" என்றான் காளி.

அந்த ஆசாமி பிரசித்தமான ஒரு மோட்டார் திருடன் என்று ஸ்தாபிதமாயிற்று. மூங்கில்குடி பெரிய பண்ணையில் திருட முயன்றவனும் அந்த ஆசாமிதான் என்று ஏற்பட்டது.

ஆனால் காளி தன் வாழ்நாள் முழுதும் "மாஜி கைதி" என்ற பட்டத்துடனேயே காலம் கழிக்க வேண்டியதாயிற்று.

# மாந்தருக்குள் ஒரு தெய்வம்

கல்கி

## 6. இராஜ குமார் சுக்லா

இந்தியாவின் அரசியல் சரித்திரத்தில் 1917-ம் வருஷம் மிகவும் முக்கியமான வருஷமாகும். அந்த ஆண்டில் இந்தியாவின் சுதந்திரப் போருக்குப் பலம் தரக் கூடிய பல சம்பவங்கள் நிகழ்ந்தன. அவற்றில் முக்கியமானது 'சம்பாரன் சத்தியாக்கிரஹம்' என்று பெயர் பெற்றது. அந்த நிகழ்ச்சியின் மூலம் மகாத்மா காந்தியின் ஆத்மசக்தியின் பெருமையை இமயமலையிலிருந்து கன்னியாகுமரி வரையில் இந்திய மக்கள் எல்லாரும் நன்கு அறிந்து கொண்டார்கள்.

பீஹார் மாகாணத்தில் சம்பாரன் ஒரு ஜில்லா. இமயமலையின் அடிவாரத்தின் அருகில் உள்ளது. ஜனக மகாராஜன் ஆட்சிபுரிந்த விதேக நாடு என்பது அதுதான். அங்கே அவுரித் தோட்டங்கள் அதிகம். பெரும்பாலான அவுரித் தோட்டங்கள் ஆங்கில முதலாளிகளுக்குச் சொந்தமானவை. சம்பாரனிலுள்ள ஒவ்வொரு குடியானவனும் இருபது ஏக்கரா நிலம் பயிர் செய்தால் அதில் மூன்று ஏக்கரா கட்டாயம் அவுரி பயிரிட வேண்டும் என்னும் விதி அங்கே அமுலில் இருந்தது. அந்த மூன்று ஏக்கராவில் விளையும் அவுரிப் பயிர் நிலச்சுவான்தாரரைச் சேரும். இவ்விதம் கட்டாயமாக அவுரி பயிரிடும் முறைக்குத் 'தின் கதியா' முறை என்று பெயர் வழங்கிற்று.

1917-ம் ஆண்டுக்கு முன்னால் இந்த விவரம் ஒன்றும் காந்தி மகானுக்குத் தெரியவே தெரியாது. 1916-ம் ஆண்டின் இறுதியில் லக்னௌ நகரில் காங்கிரஸ் மகாசபை கூடியபோது இராஜ குமார் சுக்லா என்பவர் காங்கிரஸ் விடுதியில் மகாத்மாவின் ஜாகையைத் தேடிக் கொண்டு வந்து கண்டு பிடித்தார். இராஜகுமார் சுக்லா சம்பாரன் ஜில்லா குடியானவர்களில் ஒருவர். கட்டாய அவுரிப் பயிர் செய்து கஷ்டப்பட்டவர். தம்மைப் போலவே கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கும் ஆயிரக் கணக்கான குடியானவர்களுக்குக் கதிமோக்ஷம் பிறக்கவேண்டும் என்ற ஆவல் அவர் மனதில் குடிகொண்டிருந்தது. எனவே மகாத்மாவைக் கண்டு அவரிடம் சம்பாரன் குடியானவர்களின் கஷ்டங்களைச் சொன்னார். சம்பாரனுக்கு நேரில் வந்து பார்க்க வேண்டும் என்றும் வற்புறுத்தினார். அவர் கூறிய விஷயங்கள் மகாத்மாவுக்குத் தெளிவாக விளங்கவில்லை. எனவே இராஜகுமார் சுக்லா "எங்கள் வக்கீல் பாபுவை அழைத்து வருகிறேன். அவர் எல்லாம் தெளிவாகச் சொல்வார்!" என்று கூறிவிட்டுப் போய் பாபு விரஜ கிஷோர் பிரஸாதை அழைத்துக் கொண்டுவந்தார். பின்னாளில் பாபு விரஜ கிஷோர் பிரஸாதும் பாபு ராஜேந்திர பிரஸாதும் தேசத்தொண்டில் மகாத்மாவின் சிறந்த துணைவர்கள் ஆனார்கள். ஆனால் அச்சமயம் பாபு விரஜ கிஷோரைப் பற்றி மகாத்மாவுக்கு நல்ல அபிப்பிராயம் உண்டாகவில்லை. ஒன்று மறியாத ஏழைக் குடியானவர்களிடம் பணம் பறிக்கும் வக்கீல்களில் ஒருவர் என்று எண்ணினார். எனவே, பாபு விரஜ கிஷோர் கூறியதை யெல்லாம் கேட்டுக்கொண்டு, "நிலைமையை நேரில் பார்த்துத் தெரிந்து கொள்வதற்கு முன்னால் நான் ஒன்றுமே சொல்வதற்கில்லை. ஆனால் நீங்கள் இதைப் பற்றிக் காங்கிரஸில் ஒரு தீர்மானம் கொண்டு வந்து நிறைவேற்றுவது நல்லது" என்று சொன்னார். அதன்படியே ஸ்ரீ விரஜ கிஷோர் சம்பாரன் குடியானவர்களிடம் அநுதாபம் தெரிவிக்கும் தீர்மானம் ஒன்றைக் காங்கிரஸில் கொண்டுவந்து நிறைவேற்றினார்.

இதைக்கொண்டு இராஜகுமார் சுக்லா திருப்தியடைந்து விடவில்லை. "தாங்கள் சம்பாரனுக்கு வந்து நேரில் நிலைமையைப் பார்க்க வேண்டும்" என்று அவர் மகாத்மாவிடம் சொன்னார். "ஆகட்டும்; அந்தப் பக்கங்களில் சுற்றுப் பிரயாணம் செய்வதற்கு வரும்போது சம்பாரனுக்கும் வருகிறேன்"

என்றார் மகாத்மா. அவர் கான்பூருக்குப் போனபோது இராஜகுமார் சுக்லா அவரைப் பின் தொடர்ந்தார். "இவ்விடத்திலிருந்து சம்பாரன் அதிக தூரம் இல்லை. வருகிறீர்களா?" என்று கேட்டார். மகாத்மா அப்போது அவகாசம் இல்லையென்று கூறிவிட்டு ஆமதாபாத் ஆசிரமத்துக்குச் சென்றார். இராஜகுமார் சுக்லா அங்கேயும் போனார். கடைசியாக, காந்திஜி "நான் கல்கத்தாவுக்கு இத்தனாந் தேதி வருகிறேன். அங்கே வந்து என்னைச் சம்பாரனுக்கு அழைத்துப் போங்கள்!" என்று சொன்னார்.

மகாத்மா கல்கத்தாவுக்குப் போகு முன்பே இராஜகுமார் சுக்லா அங்கே சென்று ஸ்ரீ பூபேந்திரநாத் வஸுவின் வீட்டில் காந்திஜிக்காகக் காத்திருந்தார். இவ்வாறு, கல்வியறிவு அதிகம் இல்லாத ஒரு குடியானவருடைய உறுதி காரணமாகத் தேசத்துக்கே ஒரு புதிய ஆதர்சம் ஏற்படலாயிற்று.

காந்திஜியும் இராஜகுமார் சுக்லாவும் கல்கத்தாவில் ரயில் ஏறிப் பாட்னாவுக்கு வந்து சேர்ந்தார்கள். பாட்னாவில் காந்திஜிக்குத் தெரிந்த நண்பர் யாரும் இல்லை. இராஜ குமார் சுக்லாவுக்குத் தெரிந்தவர்களோ அவரை மிகக் கீழான மனிதராகக் கருதினார்கள். பாபு ராஜேந்திர பிரஸாத்தின் பங்களாவுக்கு மகாத்மாவைச் சுக்லா அழைத்துச் சென்றார். பாபு ராஜேந்திர பிரஸாத் அச்சமயம் ஊரில் இல்லை. அவருடைய வீட்டு வேலைக்காரர்கள் காந்திஜியையும் சுக்லாவையும் இலட்சியம் செய்யவில்லை. அவர்கள் வீட்டுக் கிணற்றில் தண்ணீர் இழுப்பதைக் கூட வேலைக்காரர்கள் ஆட்சேபித்தார்கள். தண்ணீர்த் துளி தெறித்தால் தீட்டாகப் போய்விடுவோம் என்று சொன்னார்கள். மற்ற மாகாணங்களைக் காட்டிலும் பீஹாரில் தீண்டாமை மிகக் கடுமை என்பதைக் காந்திஜி அறிந்து கொண்டார். இராஜகுமார் சுக்லாவினால் தமக்கு அதிக உதவி கிடைக்காது என்பதையும் கண்டு கொண்டார். குதிரை லகானைத் தாமே இழுத்துப் பிடிக்க வேண்டியதுதான் என்று தீர்மானம் செய்தார்.

பாட்னாவில் மௌலானா மஜ்ருல் ஹக் என்னும் பிரசித்தமான தேசிய முஸ்லிம் தலைவர் வசித்தார். அவர் லண்டனில் பாரிஸ்டர் பரீட்சைக்குப் படித்த காலத்தில் மகாத்மாவுக்கு அவருடைய அறிமுகம் ஏற்பட்டிருந்தது. பிற்பாடு 1915-ம் வருஷத்துப் பம்பாய்க் காங்கிரஸின் போது மகாத்மா அவரைச் சந்தித்திருந்தார். பாட்னாவுக்கு எப்போதாவது வந்தால் தம் இல்லத்துக்கு வந்து தங்கும்படி மௌலானா மஜ்ருல் ஹக் காந்திஜியிடம் சொல்லியிருந்தார். அதை இப்போது ஞாபகப்படுத்திக்கொண்டு மகாத்மா அவருக்கு ஒரு சீட்டு எழுதி அனுப்பினார்.

மௌலானா மஜ்ருல் ஹக் உடனே தமது மோட்டாரில் ஏறிவந்து மகாத்மாவைத் தம் வீட்டுக்கு அழைத்துச் சென்றார். காந்திஜி அவரிடம் தாம் வந்த காரியத்தைத் தெரிவித்தார். சம்பாரன் விஷயமாக விசாரணை செய்வதற்குத் தாம் எந்த ஊருக்குப் போக வேண்டுமோ அந்த ஊருக்குத் தம்மை முதல் ரயிலில் ஏற்றி அனுப்பும்படி கேட்டுக் கொண்டார். முஸபர்பூருக்கு முதலில் செல்வது நலம் என்று தீர்மானிக்கப்பட்டது. ஆகவே அன்று மாலை மகாத்மாவை முஸபர்பூருக்கு ரயில் ஏற்றி அனுப்பி வைத்தார் மௌலானா மஜ்ருல் ஹக்.

முஸபர்பூரில் அச்சமயம் ஆச்சாரிய கிருபளானி வசித்து வந்தார். அந்நகரில் இருந்த அரசாங்கக் கலாசாலையில் அவர் ஆசிரியராயிருந்து சில நாளைக்கு முன்பு அந்த உத்தியோகத்தை ராஜினாமா செய்திருந்தார். மகாத்மா வரும் செய்தி அறிந்து ஆச்சாரிய கிருபளானி ஒரு பெரும் மாணாக்கர் கூட்டத்துடன் நள்ளிரவில் ஸ்டேஷனுக்கு வந்து மகாத்மா காந்தியை வரவேற்றார். ஆச்சாரிய கிருபளானி தமது நண்பரான ஆசிரியர் மல்கானியின் பங்களாவில் வசித்து வந்தார். மகாத்மா காந்தியை அவர் அந்த பங்களாவுக்கு அழைத்துப் போனார்.

மறுநாள் காலையில் மகாத்மா வந்திருக்கும் செய்தி அறிந்து முஸபர்பூர் வக்கீல்கள் பலர் அவரைப் பார்க்க வந்தார்கள். வந்தவர்களில் இராம நவமி பிரஸாத் என்பவர், "இராஜகுமார் சுக்லா உங்களிடம் சொல்லியிருக்கும் விவரங்கள் எல்லாம் உண்மைதான். அது விஷயமாக நீங்கள் ஏதாவது வேலை செய்வதாக இருந்தால், அரசாங்கக் கலாசாலை ஆசிரியரின் வீட்டில் தங்கியிருந்து கொண்டு ஒன்றும் செய்ய முடியாது. எங்களில் ஒருவர் வீட்டுக்கு வந்து தங்க வேண்டும். கயா பாபு என்பவர் இங்கே பிரபல வக்கீல். அவர் சார்பாக உங்களை அழைக்கவே நான் வந்தேன். நாங்கள் எல்லாரும் சர்க்காருக்கு விரோதமாக எந்தக் காரியமும் செய்வதற்குப் பயந்தவர்கள் தான். ஆயினும் எங்களால் இயன்ற உதவியைத் தங்களுக்குச் செய்கிறோம். இந்த மாகாணத்தின் தலைவர்களான பாபு விரஜ கிஷோர் பிரஸாத்துக்கும் பாபு இராஜேந்திர பிரஸாத்

# நிறுத்தும் உபாயம்!













துக்கும் தந்தி கொடுத்து அவர்களை வரவழைக்கிறோம்!" என்று சொன்னார்.

இதன்பேரில் மகாத்மா கயா பாபுவின் வீட்டுக்குப் போனார். தர்பங்காவிலிருந்து விரஜகிஷோர் பிரஸாதும் பூரியிலிருந்து இராஜேந்திர பிரஸாதும் சீக்கிரத்தில் வந்து சேர்ந்தார்கள். அவர்களைப் பற்றி மகாத்மா தம்முடைய பழைய அபிப்பிராயத்தை மாற்றிக் கொள்ள வேண்டியதாயிற்று. தாம் எண்ணியது போல அவர்கள் ஏழைக் குடியானவர்களிடம் பணம் பறிப்பவர்கள் அல்லவென்றும் நேர்மையும் பரோபகார சிந்தையும் உள்ளவர்கள் என்றும் அறிந்தார். விரைவிலேயே மகாத்மாவுக்கும் மேற்கூறிய இரு பீஹார் தலைவர்களுக்கும் நெருங்கிய நட்பு உண்டாயிற்று. இவர்களில் பாபு விரஜகிஷோர் பிரஸாதின் மருமகன்தான் சோஷலிஸ்ட் கட்சியின் தலைவரான ஸ்ரீ ஜெயப்பிரகாச் நாராயண் அவர்கள்.

நிலைமையை நன்றாய்த் தெரிந்து கொண்ட பிறகு காந்திஜி கூறியதாவது:—"குடியானவர்களின் சார்பாகக் கோர்ட்டுகளில் வழக்காடி அவர்களுக்கு உதவி செய்ய நீங்கள் முயன்று வந்திருக்கிறீர்கள். ஆனால் அந்த வழியில் எனக்கு நம்பிக்கை இல்லை. முதலில் குடியானவர்களைப் பயத்திலிருந்து விடுதலை செய்ய வேண்டும். 'தீன் கதியா' முறையை அடியோடு ஒழிக்க வேண்டும். இரண்டு நாளில் இங்கிருந்து திரும்பிப் போய்விடலாம் என்ற எண்ணத்துடன் நான் இங்கு வந்தேன். ஆனால் அது சாத்தியமில்லை என்று காண்கிறேன். இரண்டு வருஷம் இங்கே இருக்கும்படி நேர்ந்தாலும் நேரிடலாம். அதற்கு நான் தயார். நீங்கள் எனக்கு உதவி செய்ய முடியுமா!"

என்னவிதமான உதவி வேண்டும் என்று பாபு விரஜகிஷோர் கேட்டார். முதலில் தம்முடன் அவர்கள் வந்து குடியானவர்கள் சொல்வதைத் தமக்கு மொழிபெயர்த்துச் சொல்ல வேண்டும் என்றும், பத்திரிகைகளுக்கு எழுதுவது, கடிதப் போக்குவரவு செய்வது முதலிய குமாஸ்தா வேலை அதிகம் இருக்கும் என்றும், கடைசியாகச் சிறைக்குப் போகும்படி நேர்ந்தாலும் நேரலாம் என்றும் மகாத்மா காந்தி சொன்னார்.

"உங்களுடனேயே இருந்து மொழிபெயர்ப்பு வேலை, குமாஸ்தா வேலை செய்வதற்குத் தயாராயிருக்கிறோம். சிறைக்குப் போகிறதென்பது முற்றும் எங்களுக்குப் புதிய விஷயம். அதற்கும் சித்தமாக முயல்கிறோம்" என்று அந்த பீஹார் நண்பர்கள் காந்திஜியிடம் சொன்னார்கள்.

# வட்ட மேஜை

## ★ மகளிர்க்கு வேண்டுவன!

ஏப்ரல் 24வ 'கல்கி' இதழில் வெளிவந்துள்ள மகளிர் இல்லம் என்னும் கட்டுரையையும் அதற்கு அடிகோலிய சமூக ஊழியர் இருவருடைய தன்னலமற்ற சேவையையும் பற்றிப் படித்து மகிழ்ந்தேன்.

அக்கட்டுரையில் "நமது கல்வி முறையிலுள்ள குப்பை கூளங்கள் இன்னும் அப்படியே இருக்கின்றன; அவற்றுடன் திருக்குறளில் 300 பாடல்களை நெட்டுருச் செய்ய வேண்டுமென்று சொன்னால் மட்டும் போதுமா?" என்று தாங்கள் பேசியிருப்பதைப் படித்தேன். இவ்வுண்மை ஆண்களைக் காட்டிலும் பெண்களுக்கே முற்றிலும் பொருந்தும் என்பது என்னுடைய எண்ணம். ஏனென்றால் இப்பொழுது மகளிர்க்கு அளிக்கப்படும் கல்வி அவர்களுடைய குடும்ப வாழ்க்கைக்குச் சிறிதும் பயனற்றதாயிருக்கிறது.

நான் எஸ். எஸ். எல். ஸி. வரை படித்த பெண்ணாயிருந்தும் குழந்தைகளை வளர்க்க வேண்டிய முறையையோ கணவன் விருப்பப்படி குடும்பத்தை நடத்தவேண்டிய முறையையோ அறியேன்.

உயர்தரப் பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் மகளிர்க்கு அளிக்கப்படும் கல்வி, உதட்டில் சாயம் பூசிக்கொள்வதற்கும் முகத்தில் மாவை அப்பிக் கொள்வதற்குமே உதவி செய்கிறது.

என் பெண் படிக்கும் பள்ளிக்கூடத்தில் "கற்புடைப் பெண்டிர் அறுவர்" என்னும் புத்தகத்தைப் பாட புத்தகமாக வைத்திருக்கிறார்கள். தன் கணவனுக்காக வழக்காடிய கண்ணகியின் வரலாறும், 'மன்னவன் செல்வழிச் செல்க' என்ற கோப்பெருந்தேவியின் கதையும் இருக்குமென்று ஆவலுடன் புத்தகத்தைத் திறந்தேன். ஆனால் நான் கண்டதோ எலிசபெத் சிபார்ட்டியார், விக்டோரியா அம்மையார் முதலியோர்களுடைய வாழ்க்கை வரலாற்றைத்தான்!

ஆகையால் மாண்டிசோரி அம்மையாரின் முறைப்படி மகளிர் இல்லம் ஒவ்வொரு ஊரிலும் அமையவேண்டும். தற்காலக் கல்வி முறை அடியோடு மாறவேண்டும்.

மகளிர்க்குக் குடும்பக்கல்வி போதிக்கப்படல் வேண்டும். உண்மைக் குழந்தைகளின் உள்ள வளர்ச்சிகளை அறியும்படி [illegible] பயிற்சி புகட்ட வேண்டும். அன்றாட வாழ்க்கையைச் சிறப்பாக நடத்திச் செல்வதற்கு வேண்டிய ஒழுக்கக் கல்வியை ஊட்ட வேண்டும். கணவன் வருவாய் குறைந்திருப்பினும் அவன் மனமகிழ்ந்து இன்புறும் வண்ணம் சிக்கனக் கல்வியைக் கற்பிக்க வேண்டும். தாங்கள் வாழும் இடங்களைச் சுத்தமாக வைத்துக் கொள்வதற்கு வேண்டிய ஆரோக்கிய கல்வியும், ஓய்வுள்ள பொழுதை வீண்பேச்சில் செலவழிக்காமல் பயனுடைய காரியங்களைச் செய்யும் பொருட்டு குடிசைத் தொழிலும் கற்றுக்கொடுக்க வேண்டும். குடும்ப வாழ்விற்குப் பொருத்தமான வீட்டுக் கணக்குகளைச் சொல்லிக் கொடுக்க வேண்டும். இப்பொழுது கற்பிக்கப்பட்டு வரும் கணக்கோ, பூகோளமோ, விஞ்ஞானமோ, மகளிர்க்கு எந்த வகையில் பிற்காலக் குடும்ப வாழ்க்கைக்குப் பயன்படும் என்றுதான் தெரியவில்லை.

ரஸிகமணி டி. கே. ஸி. சொல்லியிருப்பது போல் மகளிர் இல்லம் போன்ற பள்ளிக்கூடங்களே தமிழ்நாட்டுப் பெண்களுக்கு வேண்டும்.

திருவையாறு
25—4—49

வி. அபயாம்பாள்

○●○

## லாட்டரி வேண்டாம்!

சென்னை சர்க்கார் போக்குவரத்து இலாகா மந்திரி கனம் கோபால்ரெட்டியார் நகர பஸ் சர்வீஸ் பிரயாணிகளின் ஞாபக சக்தியைச் சோதிக்க பஸ் டிக்கெட்டில் லாட்டரி முறையில் பரிசு வழங்குவதாக அறிவித்தார். அங்ஙனம் செய்வது சரியான செய்கையென்று எனக்குத் தோன்றவில்லை. ஏனெனில் ஏற்கெனவே பஸ்களில் இடம் கிடைக்காமல் பலர் கஷ்டப்படுகின்றனர். இப்பொழுது லாட்டரி முறை ஏற்படுத்தினால் நடந்து செல்லும் தூரத்தில் உள்ளவர்கள் கூட நடந்து செல்லாமல், பஸ்ஸில் செல்ல ஆரம்பிக்கலாம். 'தம் டிக்கெட்டுக்கும் பரிசு கிடைக்காதா?' என்ற நினைப்பில் பஸ் ஸ்டாண்டில் மணிக் கணக்கில் பலர் காத்திருக்கவும் கூடும். இதனால் இடநெருக்கடி இன்னும் அதிகமாகும். தவிரவும் இப்பொழுது பஸ் கட்டணத்தை அதிகமாக உயர்த்தியிருப்பதால் மேலே கூறப்பட்ட பிரயாணிகளுக்குச் செலவும் அதிகமாகும். தவிரவும் இனி கனவு போகும் பொருள்களில் பஸ் டிக்கெட்டும் ஒன்றாயிருக்கக் கூடும்.

லாட்டரி முதலான குதிரைப் பந்தயம் முதலியவைகளை ஒழிக்க வேண்டுமென்று கூறும் சென்னை சர்க்கார் செய்யக்கூடிய செய்கையல்ல இது. இங்ஙனம் செய்வதால் லாட்டரி முறையை சர்க்காரே ஆதரிப்பதாக ஆகிறது.

மாயவரம்
25—4—49

என். ராஜாமணி

○●○

## லாட்டரி அல்ல!

நம் சர்க்கார் பஸ்ஸில் அதிர்ஷ்ட நம்பர் டிக்கெட் ஒன்று ஏற்பாடு செய்ய உத்தேசிக்கிறார்கள். இதை நான் வரவேற்கிறேன்.

ஆனால் தற்போது எது வந்தாலும் எதிர்ப்பது என்பது சகஜமாகிவிட்டது. அது நல்லதா, கெட்டதா என்பதைக் கூட ஆராய்வது கிடையாது. இத் திட்டத்தைப் பிரயாணிகள் சங்கம் எதிர்க்கிறது! உண்மையிலேயே சில கண்டக்டர்கள் டிக்கெட் கொடுப்பதில்லை. சிலர் கொடுத்தாலும் அதை அடுத்த 'ஸ்டாப்பில்' வாங்கிக்கொண்டு வேறொரு பிரயாணிக்கு விற்பதுமுண்டு. இதையெல்லாம் சர்க்கார் கண்டு பிடிக்கவில்லையே என வருத்தப் பட்டுக்கொண்டிருந்தேன். முடிவில் சர்க்கார்

விழித்துக் கொண்டு இவ்வற்புதமான திட்டத்தைக் கொண்டுவர முயற்சித்தால் சிலர் எதிர்க்கின்றனர். இதை 'லாட்டரிக்கு' ஒப்பிடுகிறார்கள். இத் திட்டத்தால் சில சமயம் பண்ணைக்கு லாட்டரி போடுவதுகூடத் தவிர்க்கப்படலாம். லாட்டரி என்றால் இதற்காக சர்க்கார் தனிக் கட்டணம் ஒன்றும் வசூலிக்கவில்லை; கையைவிட்டுத்தான் தனியாகப் பணம் கொடுக்கிறார்கள். இதை சர்க்கார் சில தினங்களுக்குமுன் விளக்கியிருக்கிறார்கள். ஆகையால் சர்க்கார் முன் வைத்த காலைப் பின் வைக்கமாட்டார்கள் என்று நம்புகிறேன்.

சென்னை
25—4—49 எஸ். பாலசுப்ரமணியம்

○●○

## இரண்டில் ஒன்று

சில வருடங்களுக்கு முன் சென்னை ரேடியோ நிலையம் பொது மக்களின் புகழ்ச்சிக்குப் பாத்திரமாக இருந்தது. ஆனால் நாளடைவில் அந்தச் செல்வாக்கு சிதைந்து வருவதைப் பார்த்தால் மிகவும் வருத்தம்தான் ஏற்படுகிறது.

சென்னை ரேடியோவில் சமீப காலமாகப் 'புரோகிராம்'கள் கூடப் (பாஷை வாரியாகப்) பிரிக்கப்பட்டு வருவது நமக்குத் தெரியும். இசைத்தட்டு நிகழ்ச்சிகளில் கூட இப்பிரிவு தான். இதற்கு என்ன காரணம் என்று ரேடியோ நிலையத்தாருக்கு எழுதிக் கேட்டதில் இப்பிரிவுகள் ஆந்திரர் தமிழர்கள் இருவரையும் திருப்தி செய்வதற்காகத்தான் என்று பதில் எழுதினார்கள். மேலும் அச்சமயத்தில் இந்த 'விஜயவாடா' நிலையம் ஏற்படாததால் சென்னை நிலையம் முக்கால்வாசி ஆந்திர நிகழ்ச்சிகளை ஒலி பரப்பியது. அது ஒரு விதத்தில் நியாயமே!

ஆனால் இப்போது ஆந்திரர்களுக்கென்று தனியாக 'விஜயவாடா' நிலையம் ஏற்படுத்தப் பட்டு விட்டது. மேலும் 'ஹைதராபாத்' நிலையம் கூடத் தெலுங்கு நிகழ்ச்சிகளை அதிகம் ஒலி பரப்புகிறது. போதாக் குறைக்குச் சென்னை நிலையம் பாதி நிகழ்ச்சிகளுக்கு மேல் தெலுங்கு நிகழ்ச்சிகளை ஒலி பரப்புகின்றது!

திருச்சி நிலையத்தை சென்னை வாசிகள் எல்லோராலும் அனுபவிக்க முடியாது. பக்கத்து வீட்டில் முப்பது மின்சார விசிறிகள், எதிரே ஒரு பெரிய நெல் மிஷின், அடுத்த தெருவில் ஒரு தொழிற்சாலை, இப்படி இருக்கும் பிராந்தியங்களில் நம் வீடுகள் அமைந்திருக்கும்போது இந்தத் திருச்சி நிலையத்தை எப்படிக் கேட்பது? இந்த அழகில் திருச்சி நிலையமோ மத்திம அலை (Medium wave) நிலையம்!

ஆகவே, தமிழர்களுக்கு இரு உதவிகளில் ஏதாவது ஒன்றை அரசாங்கம் கட்டாயம் செய்ய வேண்டும்.

ஒன்று தமிழர்களுக்காக இன்னொரு ரேடியோ நிலையம் ஏற்படுத்த வேண்டும். அல்லது திருச்சியைச் சிற்றலைகளில் (Short wave) ஒலிபரப்ப வேண்டும். இதில் ஏதாவ தொன்றை அரசாங்கம் உடனே செய்யும் என்று நம்புகிறேன்.

திருவல்லிக்கேணி
23—4—49 பத்மாசனி

○●○

## அதிகாரிகளின் அசிரத்தை

இண்டர் பரீட்சைக் கேள்வித்தாள்களை 'அவுட்'டாக்கி இரண்டாவது பரீட்சையால் எங்கள் உயிரை வாட்டியதுமல்லாமல், வினாத் தாள்களில் வேறு விசித்திரங்கள் செய்து வைக்கிறார்கள் நமது சர்வகலாசாலை அதிகாரிகள். சென்ற பரீட்சையில் கேள்விகள் தாறுமாறாக இருந்தன. இந்தப் பரீட்சையில் கேள்விகள் தவறாகக் கொடுக்கப்பட்டிருக்கின்றன. உதாரணமாக, பௌதிகம் முதல் வினாத் தாளில் (Physics I Paper) இரண்டாவது கேள்வியில் V-2 என்பதற்குப் பதிலாக B-2 என்று அடிக்கப்பட்டிருந்தது. இந்தத் தவறுதலினால் அநேக மாணவர்கள் அந்தக் கேள்வியைப் புரிந்துகொள்ள முடியாமல் விட்டு விட்டார்கள். மேற்பார்வையாளரைக் (Supervisers) கேட்டால் தங்களுக்கு ஒன்றும் தெரியாது என்று சொல்லிவிடுகிறார்கள். ஆம், உண்மையிலேயே அந்த மேற்பார்வையாளருக்கு ஒன்றுமே தெரியவில்லைதான்.

இப்படி எங்கள் உயிரை வாட்டும் இரக்கமில்லா சர்வகலாசாலையை என்னென்பது? கம்பர் சொன்னதுபோல் இரக்கமில்லாதாரை அரக்கர் என்று சொல்லாமல் வேறு என்ன சொல்லி அழைப்பது?

சென்னை
24—4—49 வி. பி. புருஷோத்தமன்

○●○

## திருவாரூர்த் திருவிழா

அண்மையில் திருவாரூரில் நடந்த தமிழ்ச் விழாவைப் பற்றி அறியாத தமிழர் இருக்க மாட்டார். நானும் திருவாரூருக்குச் சென்று நோக்கும் பேறு பெறவில்லை என்றாலும் வானொலி மூலம் நிகழ்ச்சிகளைக் கேட்டு மகிழ்ந்தேன். தில்லி ஆங்கிலச் செய்தி ஒலி பரப்பிலும் திருவாரூர்த் திருவிழா பற்றிச் சொல்லப்பட்ட தென்றால், இந்தியா முழுதும் தமிழ் விழாவின் மணம் கமழ்ந்திருக்கிறது.



"பாகவதர் கையிலே என்ன சுளுக்கா?"

"என்ன அப்படிக் கேட்கிறீங்க? நேத்தைக்கு அவர் செய்த கச்சேரியிலே என்ன பல்லவி தெரியுமா? கண்ட ஜாதி திரிபுடை தாளம் 28 அக்ஷரம் பல்லவியை அநுலோமம் பிரதிலோமம் பண்ணி ஒரு பல்லவி பாடியிருக்கிறார் பாருங்க! எக்கச்சக்கமாகத் தாளம்போட்டுக் கை 'பிராக்சர்' ஆயிட்டது!"

★ வட்ட மேஜை பரிசுத் தொகை ரூ. 25-ம் 'மகளிர்க்கு வேண்டுவன!' என்ற கடிதம் எழுதிய திருவையாறு ஸ்ரீமதி வி. அபயாம்பாள் அம்மாளுக்கு வழங்கப்பட்டது.

என்பதுதானே பொருள்! தமிழ் வளர்ச்சிக் கழகத்தாரின் இந்த முயற்சி மிகவும் பாராட்டத் தக்கது.

சென்ற ஆண்டு நிகழ்ந்த விழாவைவிட இவ்வாண்டு நடந்த விழா பொருளாதாரம், விஞ்ஞானம், இலக்கியம்—ஆகியவை பற்றிய தனித்தனி மகாநாடுகளும், பொருட் காட்சிகளும் சேர்ந்து விழாவை அழகு செய்தது. தமிழர் இனி எல்லாத் துறையிலும் உயர்ந்து விளங்கப்போவது இன்னும் என்பதை எடுத்துக் காட்டுவதாக இவ்வாண்டு விழா அமைந்ததும் போற்றத்தக்கது.

விழாவில் பல துறைகளிலும் சொற்பொழிவுகள் ஆற்றிய அறிஞர் பெருமக்களின் உரைகளைத் தமிழ் வளர்ச்சிக் கழகத்தார் சிறு சிறு நூல்களாக வெளியிட்டு மக்களுக்கு வழங்கினால் அது பயன் தரும் என்பது என் எண்ணம். இது மட்டுமின்றி மாதந்தோறும் பொருளாதாரம், விஞ்ஞானம், இலக்கியம், சரித்திரம், இசை—போன்ற ஒவ்வொரு பிரிவிலும் ஆங்காங்கே அறிஞர்களைக்கொண்டு நல்ல ஆராய்ச்சிச் சொற்பொழிவுகள் நிகழ்த்தும்படி செய்து, அவைகளை நூல்களாக வெளியிட்டு, அதன் மூலம் தமிழ் வளர்ச்சிக் கழகத்திற்கு ஆக்கம் தேடலாம். திருக்கோவில்களில் மறைந்து போற்றப்படாது கிடக்கும் சிற்பங்களையும் ஓவியங்களையும் 'போட்டோ'ப் படம் எடுத்து, தக்க அறிஞர்களைக் கொண்டு அவைகள் பணி செய்யப்பட்ட விதம், செய்வித்தவர்கள், சிற்பிகளின் கைத்திறன் ஆகியவைகளை விளக்குவதாக ஆண்டுதோறும் ஒரு நூல் வெளியிட்டுச் சிற்ப, ஓவியக் கலைகளை வளர்க்கலாம். தமிழ் விழா முடிந்ததும், கழகத்தார் அந்த நிகழ்ச்சிகள், சொற்பொழிவுகள், ஆகிய பலவற்றையும் மக்களுக்கு உணர்த்தும் பொருட்டு ஆண்டுதோறும் "தமிழ் விழா மலர்" என்று ஒன்று வெளியிடுதல் நன்று.

சென்னை
23—4—49

வை. ஜயராமன்

○●○

## மண் குதிரையை நம்பாதீர்கள்!

பிரஞ்சு குடியேற்ற பிரதேசங்களின் இன்ஸ்பெக்டர் ஜெனரல் "ரோஸ்யல்" சமீபத்தில் புதுச்சேரிக்கு வந்திருந்தார். அவர் "பிரஞ்சிந்திய மக்களுக்குத் தேவையான எல்லா சாமான்களையும் பாகிஸ்தானிலிருந்து தருவித்துக் கொள்ளலாம். இதற்குப் பிரஞ்சு சர்க்கார் வேண்டிய உதவி செய்வார்கள். எந்த நிலைமையையும் சமாளிக்கப் பிரஞ்சு சர்க்காருக்கு திறமை உண்டு" என்று கூறினாராம்.

புதுவையில் வாழும் இந்தியர்கள் என்ன பதில் சொல்லப் போகிறார்கள்? "பிரஞ்சு ஏகாதிபத்தியமே! இனியும் உங்கள் சூழ்ச்சி பலிக்காது. நாங்கள் தோள் வலி படைத்த இந்தியர்கள், சுதந்திர வீரர்கள். பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை ஆட்டிவைத்த எங்களிடம் உங்கள் ஏமாற்று வித்தையைக் காட்ட வேண்டாம். எங்களுக்கு வேண்டிய பொருள்களைப் பாகிஸ்தானிலிருந்து எங்களுக்குத் தருவித்துக் கொடுக்க நீங்கள் யார்? எங்களை அடுத்து இருக்கிறது இந்தியக் குடியரசு: அங்கு உள்ளவர்கள் எங்களுடைய சகோதரர்கள்: அவர்களிடம் தேவையான பொருள்களைக் கேட்டு வாங்கிக்கொள்ள எங்களுக்குத் திறமை உண்டு. அதற்கு வழியும் தெரியும். இந்திய யூனியனுடன் சேர வேண்டும் என்பதே எங்கள் அவா. நீங்கள் மூட்டையைக் கட்டிக்கொண்டு பிரான்ஸுக்குக் கப்பல் ஏறலாம். நாங்கள் வேண்டுமானால் வழியனுப்பி வைக்கிறோம். பிரயாணத்தை ஒத்தி வைக்கவேண்டாம். எந்த நிலைமையையும் சமாளித்துக் கொள்ள எங்களுக்கு அறிவும், ஆற்றலும் உண்டு" என்று பிரஞ்சு இந்தியர்கள் சொல்லவேண்டும்.



"ஏண்டாப்பா, உன் பேர் என்ன? திருப்பதியோ?"
"இல்லீங்க, ஸ்வாமி! என் பேர் திருப்பதி!"
"அப்படியா? உன் பெயர் திருப்பதியாக்குமென்று நினைத்தேன்!"

பிரஞ்சு இந்திய சகோதரர்களே! உங்களை இந்திய யூனியன் சேர்த்துக்கொள்ள என்றும் தயார். மண் குதிரையை நம்பி ஆற்றில் இறங்கி விடாதீர்கள்!

கே. எஸ். கே. மூர்த்தி

○●○

## பசி தீர வழியுண்டு!

உணவுப் பஞ்சத்தை முன்னிட்டு இந்தியாவின் பிரதம மந்திரியாகிய ஜவஹர்லால் நேரு தேச மக்கள் தம்மைப் போலவே அரிசி ஆகாரத்தைக் குறைத்துக்கொண்டு கிழங்கு வகைகளை அதிகமாகச் சேர்த்துக் கொள்ளுமாறு கேட்டுக் கொண்டார். அரிசி ஆகாரத்தைக் குறைக்க வேண்டியதில்லை. தானாகக் குறைந்துதானே அரிசி ரேஷன் கடையிலிருந்து வீட்டுக்கு வருகிறது! ஒரு வாரத்திற்கென்று போடும் அரிசி சாதாரணமாக நான்கு நாட்களுக்குத்தான் வருகிறது. மற்ற மூன்று நாட்கள் பசியால் வாடவேண்டும். அல்லது அதிக விலைக்குக் கறுப்பு மார்க்கெட்டில் அரிசி வாங்க வேண்டும். அவ்வாறு வாங்கப் பணமில்லாதவர்கள் என்ன செய்வது?

நாள்தோறும் சேலத்தைச் சுற்றியுள்ள பல கிராமங்களிலிருந்து வண்டி வண்டியாகக் குச்சி வள்ளிக்கிழங்கு வந்து குவிகின்றது. சேலத்தில் உள்ள மக்கள் நாள்தோறும் அக்கிழங்கை வாங்கி, சிலர் அதை வேகவைத்தும் பலர் பச்சையாகவும் உட்கொள்ளுகிறார்கள். அரிசி உணவையும் அதனுடன் சாப்பிடுகிறார்கள். மகிழ்ச்சியுடனேயே உட்கொள்ளு

கிறார்கள். மேலும் கிழங்கு வகைகள் தற்போது போடும் அரிசியை விட உடலுக்கு எவ்வளவோ சத்துள்ளவை.

ஆகையால் 'பசி தீர வழியில்லை' என்று ஏங்கிய மக்களுக்குப் 'பசி தீர வழியுண்டு' என்ற நம்பிக்கையை ஊட்டிய 'கிழங்கோ, கிழங்கு!' என்ற குரலுக்கு இந்த உலகத்தை விட மேலானது ஒன்று இருந்தால் அதையும் கொடுக்கலாம்.

பசி தீர வழி கோலும் கிழங்கிற்கு எனது மனமார்ந்த வந்தனங்கள்.

சேலம்
21—4—49 ம. சு. இராமமூர்த்தி

○●○

## புதுக்கோட்டையும் ஜனநாயகமும்

புதுக்கோட்டை சமஸ்தானம் சென்னை மாகாணத்துடன் இணைந்து ஒரு வருஷத்துக்கு மேலாகியும் மாகாண சட்ட சபையில் புதுக்கோட்டை மக்களுக்குப் பிரதிநிதித்வம் அளிக்க சென்னை மந்திரி சபை முன்வரவில்லை. பம்பாய் மாகாணத்துடன் இணைந்த பரோடா முதலிய சமஸ்தானங்களுக்கு உடனடியாகச் சட்டசபையில் பிரதிநிதித்வம் கிடைத்துவிட்டது. புதுக் கோட்டை மக்களின் இந்தக் குறையை திரு வி. பி. மேனன் அவர்களிடமும், சென்னை மாஜி பிரதமர் திரு ஓ. பி. ராமசாமி ரெட்டியார் அவர்களிடமும், பிரதம காரியதரிசி திரு. ராமுண்ணி மேனன் அவர்களிடமும் உடனடியாகக் கவனித்து, இந்திய அரசாங்கத்தின் கொள்கைப்படி புதுக்கோட்டை மக்களுக்குச் சட்டசபையில் பிரதிநிதித்வம் அளிக்க வேண்டுமென்று சொல்லி, அதன்படி ஏற்பாடு நடந்து வருவதாய்ப் புதுக்கோட்டை மக்கள் நினைத்திருந்தார்கள். 18-4-49 சட்டசபைக் கூட்டத்தில் கனம் கோபால் ரெட்டி அவர்கள் ராஜா ஸர் முத்தையா செட்டியார் அவர்களின் கேள்விக்குப் பதில் அளிக்கையில், "புதுக் கோட்டைக்கு அரசியல் நிர்ணய சபையில் பிரதிநிதித்வம் அளிக்கப்பட்டிருக்கிறது. இது போதும். இந்தச் சபையில் பிரதிநிதித்வம் அளிக்க ஆர்டர்-இன்-கவுன்ஸில் சட்டத்தைத் திருத்தவேண்டும். அது சாத்தியமில்லை'' என்று சொல்லியிருக்கிறார். இதுதானா ஜன நாயகம்? ஐந்து லட்சம் மக்களுக்குச் சட்ட சபையில் பிரதிநிதித்வம் அளிக்க வேண்டிய அவசியத்தை மந்திரி சபை உணராதது புதுக் கோட்டை மக்களின் விதி போலும்!

இராயவரம்
20—4—49 இராம ஸ்ரீனிவாசன்

○●○

## பரிகாரம் உண்டா?

இப்போது இலங்கையில் தேயிலை ரப்பர் தோட்டங்களில் வேலை செய்யும் எட்டரை லட்சம் இந்தியர்களின் நிலைமை படுமோசமாகிவிட்டது. பொதுவாகச் சில தோட்டங்களில் நடத்தப்படும் அக்கிரமங்களுக்கு ஒரு அளவே இல்லை. இதை ஏன் என்று கேட்பாரும் இல்லை. அப்படியே ஒருவர் இருவர் ஏதாவது ஒன்றைக் கேட்டுவிட்டால் தற்போது உள்ள இலங்கை குடியேற்ற வெளியேற்றச் சட்டப்படி தொழிலாளர் வசிக்கும் வீடுகளில் தோட்டத்து சூப்பிரண்டின் கையொப்பமிட்ட ஒரு நோட்டீஸ் ஒட்டப்பட்டுவிடுகிறது. அந்த நோட்டீஸ் பிரகாரம் அவன் அதில் குறிக்கப்பட்ட தேதியிலிருந்து முப்பது நாட்களில் வீட்டைக் காலி செய்து விட்டுப் போக வேண்டும். அதற்கு மேல் அப்பீல் கிடையாது.

இங்கே இதற்காக இலங்கை இந்திய காங்கிரஸ் இதுவரை எடுத்துக்கொண்ட நடவடிக்கைகள் எல்லாம் கவனிக்கப்படவேயில்லை. இலங்கை அரசாங்கத்தாரிடம் இதைப்பற்றி வாதாட இந்தியப் பிரதிநிதிகள் யாவரேனும் கேட்டாலும் அது சட்டசபையிலே நிராகரிக்கப்பட்டு விடுகிறது.

இதையெல்லாம் இந்திய அரசாங்கத்தார் கவனித்து ஏதாவது பரிகாரம் தேடுவார்களா?

பதுளை, சிலோன்
20—4—49 எஸ். எம். துரைசாமி



★ ★

டாக்டர் எஸ். ராஜகோபாலன்—டாக்டர் சாந்த சுந்தரி தம்பதிகளின் செல்வப் புதல்வி சித்ரலேகாவும், குமாரி நளினியும் பரதநாட்டியக் கலை பயின்று சில காலத்துக்குமுன்பு அரங்கேற்றினார்கள். பரத நாட்டியத்தோடு, மணிபுரி வகையைச் சேர்ந்த பாம்பாட்டி நடனம் முதலியவையும் நன்கு பயின்று ஆடிப் புகழ் பெற்றிருக்கிறார்கள்.

★ ★

# கல்கி



ALKI மே 8, 1949 4 அண

REGD. No. M. 4392

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras